# செந்தமிழ்ச் செல்வி

## உள்ளுறை



சிலம்பு-௫௨] வள்ளுவ ஆண்டு ௨௦௦௯, ஆடி August, 78 [பரல்-௧௨

# ‘செந்தமிழ்ச் செல்வி’

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---

## “செந்தமிழ்ச் செல்வி”

(இலக்கியத் திங்கள் இதழ்)

## உறுப்பினர்கட்கு வேண்டுகோள்

அன்புடையீர்!

வணக்கம். செந்தமிழ்ச் செல்வியின் 52 ஆம் சிலம்பு இவ் விதழுடன் முடிந்து, வரும் ஆவணித் திங்கள் (செப்டம்பர் 12 ஆம் நாள்) 53 ஆம் சிலம்பு துவங்க விருக்கின்றது.

இவ்விதழ் அறிஞர் பலர் எழுதும் ஆராய்ச்சிக் கட்டுரைகளையும், வரலாற்றுச் செய்திகளையும் தாங்கி வெளிவரும் ஓர் அரிய வரலாற்றுப் பெட்டகமாகவும், கலைக் களஞ்சியம் போலும் திகழ்கிறது. ஆகவே பள்ளி, கல்லூரி மற்றமுள்ள பொது நூலகங்கள்தோறும், கற்றூர் இல்லங்கள்தோறும் இவ்விதழின் தொகுப்புகள் இருத்தல் வேண்டும். எனவே இதுகாறும் முறையே வாங்கி ஆதரித்தமை போன்று உரிய கையொப்பத் தொகையினை (ரு.12/-ஐ)உடன்அனுப்பிப் புதுப்பித்துக் கொள்ளுமாறு உறுப்பினர்களை விரும்பி வேண்டிக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

(Subscription Rates)

ஆண்டுக் கையோப்பம்

| | |
|---|---|
| உள்நாடு ரு. 12 00 | வெளிநாடு ரு. 20 00 |

ஆயுள் கையோப்பம்

| | |
|---|---|
| உள்நாடு ரு. 120 00 | வெளிநாடு ரு. 200 00 |

செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு உ00௯, ஆடி | பரல் |
|---|---|---|
| ருஉ | ஆகச்ஃடு 1978 | கஉ |

# மறைமலையடிகள் நூல்நிலையத்தின் இருபதாண்டு நிறைவுவிழாவும் தமிழ்ப் பெருமக்கள் கடமையும்

பொது நூலக இயக்கம் சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் உலகெங்கணும் மலரத் தொடங்கியது. அதுவரை தனிப்பட்ட அரசர்களிடமும் செல்வர்களிடமும் பல்கலைக் கழகங்கள், கல்லூரிகள், பள்ளிகள் போன்ற கல்வி நிலையங்களிலும் சிறு நூலகங்கள் தனிச் சொத்தாகப் பேணிப் பாதுகாக்கப் பெற்று வந்தன இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் பொதுமக்கள் பயன்படுத்துவதற்காகப் பொது நூலகங்கள் அரசாலும், நகர், ஊர் ஆட்சி மன்றங்களாலும் தோற்றுவிக்கப் பெற்றன. அவற்றைச் செம்மையுற நடத்துதற்காக நூலகவரி தனியாக மக்களிடம் வாங்கப்பெற்றது.

பொது நூலக இயக்கத்தின் இன்றியமையாமையை இந்திய நாடும் இந் நூற்றாண்டின் தொடககத்தில் உணர்ந்தது. பரோடா மன்னர் தம் மாநில மக்களுக்காகப் பொது நூலகங்கள் தொடங்கினர். அதே காலத்தில் தமிழகத்திலும் ஆங்காங்கு ஒரு சில சிறு முயற்சிகள் மேற்கொள்ளப்பெற்றன. இருப்பினும் இந்திய நூலகத் தந்தையான டாக்டர். சீ. இரா. அரங்கநாதன் அவர்கள் முயற்சியால் இந்தியாவில் முதன் முதலாக நம் தமிழக மாநிலத்தில் 'பொது நூலகச்சட்டம்' 1948 இல் நிறைவேற்றப் பெற்றது. அதன் பயனாகத் தமிழ்நாட்டு மாவட்டங்களிலும் பேரூர், சிற்றூர்களிலும் பொது நூலகக் கிளைகள் தோன்றலாயின.

தமிழகத்தில் 1958க்கு முன்னர் ஒரு சில தனியார் நூலகங்கள் மக்களின் நூலறிவுப் பசியைத் தணிக்க முற்பட்டன. இருப்பினும் தமிழ்மக்களின் மொழி, இலக்கியம், வரலாறு, சமயம், பண்பாடு போன்ற பல துறைச் செய்திகளை எடுத்துக் கூறும் நூல்கள் அனைத்தும் தமிழ்மக்கள் அனைவருக்கும் ஒரே இடத்தில் பார்ப்பதற்கும், படிப்பதற்கும் கிடைக்கச் செய்யும் வாய்ப்பு இல்லாமலேயிருந்தது.

இந் நிலையில் (உலகில் வேறு எந்த நூல் வெளியீட்டு நிறுவனமும் செய்யாத வகையில்) தமிழ் நூல் வெளியீட்டுத் துறையில் தலை சிறந்து விளங்கும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தனித் தமிழ்க்கடல் மறைத்திரு. மறைமலையடிகளார் நினைவாக 1958 ஆகஸ்ட்டு 24 ஆம் நாள் சென்னை, லிங்கிச் செட்டித் தெரு 105 ஆம் எண் கட்டிடத்தில் மறைமலையடிகள் நூல்நிலையத்தைத் தொடங்கியது. நூலகத்தை அமைத்து நடத்தும் பணியில் கழகம் அதற்கு முன்னரே ஈடுபட்டுள்ளது. நெல்லையில் சிவஞான முனிவர் நூல்நிலையத்தை 1924 முதல் நடத்தி வருகின்றது.

மறைமலையடிகளார் இலக்கியம், சமயம், தத்துவம், மறை பொருள், வரலாறு, ஆய்வியல் போன்ற பலதுறைகளில் 40க்கு மேற்பட்ட அரிய பெரிய நூல்களையும் மாத இதழ்களையும் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதியவர்; வெளியிட்டவர். அவர்தம் ஆய்வுக்கென ஒரு நூறாயிரம் ரூபாய்க்குமேல் மதிப்புள்ள ஆங்கிலம், தமிழ் வடமொழி நூல்களைத் தொகுத்து வைத்திருந்தார். அவர் தம் மறைவின் போது அந் நூல்களனைத்தையும் கழகம் ஏற்றுக் கொண்டு தம் பெயரில் ஒரு நூல் நிலையத்தை நிறுவவேண்டுமென்று விருப்ப ஆவணத்தில் குறிப்பிட்டிருந்தார். கழகமும் சென்னையில் சிறந்த நூலகம் ஒன்றை அமைக்க வேண்டுமென்று எண்ணி வந்தது. எனவே, அடிகளார் விருப்பத்திற்கிணங்கச் சென்னையில் அதற்கென வாங்கப் பெற்ற கட்டிடமொன்று நூலகத்திற்கேற்ற வகையில் புதுப்பிக்கப் பெற்று உருவாகியது. கழகம் தொகுத்து வைத்திருந்த ஐயாயிரம் நூல்களையும் பழந்தமிழ் இதழ்த் தொகுதிகளையும் சென்னை மாநிலக் கல்லூரி வரலாற்றுப் பேராசிரியராக இருந்த வி. அரங்காசார்யா அவர்களின் அரிய வரலாற்று நூல்கள் ஐநூற்று ஐம்பதையும் அடிகளாருடைய நூல்களுடன் சேர்த்து நூலகம் தொடங்கப் பெற்றது.

1958 ஆகஸ்ட்டு 24 அன்று அப்போது ஆளுநராயிருந்த உயர்திரு. விட்ணுராம் மேதி அவர்கள் தலைமையில் அமைச்சர்

மாண்புமிகு எம். பக்தவத்சலம் அவர்கள் நூலகத்தைத் திறந்து வைத்தார்கள். அன்று மாலையில் நடைபெற்ற விழா நிகழ்ச்சியில் பேரறிஞர் அண்ணா அவர்கள் கலந்துகொண்டு 'தமிழ் இலக்கியங்களை வகைப்படுத்தித் தந்தால்தான் தமிழின் தொன்மையும், பெருமையும் தமிழர்களால் சரிவர உணரப்பட முடியும். இந்த வகைக்கு மறைமலையடிகள் நூலகம் பயன்பட வேண்டும்' என்று குறிப்பிட்டார்கள்.

பேரறிஞர் அண்ணா அவர்கள் விரும்பிய வண்ணம் தமிழ் நூல்களைத் தொகுத்து வகுத்து முறைப்படி தருவதில் இந் நூலகம் சிறந்து விளங்குகிறது. தமிழின் தொன்மையையும் பெருமையையும் எடுத்தியம்பும் வகையில் பல ஆய்வாளர்கள் இங்குள்ள நூல்களைப் பயன்படுத்திப் பல்கலைக் கழக ஆய்வேடுகளை உருவாக்கியுள்ளனர்.

அமெரிக்காவிலிருந்து திருமதி டீல், திரு. டேவிட் லடன், திரு. ரிச்சர்டு கென்னடி, திரு. ரி. பிராஸ்கா, லண்டனிலிருந்து திரு. கிரிஸ் பேகர், டாக்டர் ஆஷர், ருசியாவிலிருந்து செம்பியன், பிரான்சிலிருந்து டாக்டர். குரோ, திரு. டுவர்டியர், ஹவாயிலிருந்து திரு. பாமர், செக் நாட்டிலிருந்து டாக்டர் கமில் சுவலபில், திரு. பிலிப்ஸ்கி, மலேசியாவிலிருந்து திருமதி. லோகநாயகி நன்னிதம்பி, இலங்கையிலிருந்து பேரா. க. சிவத்தம்பி, திரு. அருணாசலம் போன்ற வெளிநாட்டறிஞர்கள் இந் நூலகத்தைப் பயன்படுத்தித் தமிழின் தொன்மையையும் பெருமையையும் உலகுக்கு அறிவித்துள்ளனர்.

இந்தியாவிலும் தில்லி, பம்பாய், திருப்பதி வெங்கடேசுவரா, உசுமானியா, கர்நாடகா, கேரளா, கள்ளிக் கோட்டை, சென்னை, மதுரை, அண்ணாமலை போன்ற பல பல்கலைக்கழகங்களிலிருந்து இருநூற்றுக்கு மேற்பட்ட ஆய்வாளர்கள் இந் நூலகத்தைப் பயன்படுத்தி எம் லிட்., எம். பில் , பி. எச். டி. போன்ற பட்டங்களுக்குரிய ஆய்வுரைகளை உருவாக்கியுள்ளனர்.

தமிழக அரசுத் தொல்பொருள் ஆய்வுத்துறையில் ஆண்டுதோறும் பட்டமேற் படிப்புப் பயிலும் மாணவர்கள் இந் நூலகத்தைத் தவருது பயன்படுத்தித் தங்கள் ஆய்வேட்டுக்குரிய செய்திகளைத் தொகுக்கின்றனர்.

சென்னை மாநகரில் நடைபெறும் தமிழ்க் கல்லூரிகளில் தனியாகப் புலவர், பி.லிட்., எம்.ஏ. பயிலும் ஆசிரியர்களும் கல்லூரிகளில் பட்டவகுப்பில் படிக்கும் மாணவர்களும் இந் நூலகத்தால் பெரிதும் பயனுறுகின்றனர்.

இந் நூலகத்தைப் பயன்படுத்தி 'டாக்டர்' பட்டம் பெற்ற பேரறிஞர்களுள் குறிப்பிடத்தக்கோர் திருவாளர்கள் கா. மீனாட்சிசுந்தரம், மெ. சுந்தரம், சி. பாலசுப்பிரமணியம், அவ்வை. நடராசன், க. ப. அறவாணன், இரா. மோகன், சு. வேங்கடராமன், மா. நவநீதகிருட்டிணன், அ. தாமோதரன், சு. பாலச்சந்திரன், இரா. குமாரவேலு முதலியோர் ஆவர்.

அறிஞர் அண்ணா, காமராசர், ப. சுப்பராயன் போன்ற மறைந்த தலைவர்களும், இன்றைய ஆளுநர் உயர்திரு. பிரபுதாசு பட்வாரி, அமைச்சர்களான திரு. ஆர். எம். வீரப்பன், திரு. கா. காளிமுத்து, திருச்சி. ஆர். சௌந்திரராசன், மற்றும் திருவாளர்கள் கலைஞர் மு. கருணாநிதி, எம். பக்தவத்சலம், சி. சுப்பிரமணியம், நாவலர். இரா. நெடுஞ்செழியன், பேராசிரியர் க. அன்பழகன், சிலம்புச் செல்வர் ம. பொ. சி., திருமுருக கிருபானந்த வாரியார், தவத்திரு. குன்றக்குடி அடிகளார், நடுவர்கள் மா. அனந்த நாராயணன், திரு. ஆர். சதாசிவம், திரு. மகராசன் போன்ற பெருந்தலைவர்களும் பேரறிஞர்களும் நூலகத்தைப் பார்வையிட்டுப் பாராட்டியுள்ளனர்.

இந்து, இந்தியன் எக்ஸ்பிரசு, ஏசியன் டிராவல் நியூசு, மாலைமுரசு, தமிழரசு, குமுதம், தீபம் போன்ற நாள், கிழமை, மாத இதழ்களும் அனைத்திந்திய வானொலியும் நூலகத்தின் சிறப்பைப் பாராட்டியுள்ளன.

நூலகத்தின் பயன் உணரப்பட்ட அளவில் அதனைப் பயன்படுத்துவோர் எண்ணிக்கை பெருகலாயிற்று. ஆய்வாளர்கள் அமைதியாக இருந்து படிக்கவும் சொற்பொழிவுகள் ஆற்றுவதற்காகவும் அழகிய மண்டபம் இராமலிங்க வள்ளலார் பெயரில் 1972இல் திறக்கப்பெற்றது.

பத்தாயிரம் நூல்களுடன் தொடங்கப்பெற்ற இந் நூலகத்தில் இன்று முப்பத்தையாயிரம் நூல்களுக்கு மேலுள்ளன. திருக்குறள், சங்க இலக்கியம், இலக்கணம், சமயம், புராணம் போன்ற பல துறைகளில் இதுவரை அச்சிடப்பெற்றுள்ள நூல்கள் அனைத்தும் தொகுத்துவைக்கப் பெற்றுள்ளன. 18, 19 ஆம் நூற்றாண்டில் அச்சிடப் பெற்ற கிடைத்தற்கரிய பழைய பதிப்புகள் ஆயிரக் கணக்கில் உள்ளன. திருக்குறளின் பல்வேறு மொழிகளில் வெளிவந்துள்ள மொழி பெயர்ப்புகள் அனைத்துமுள்ளன. தமிழ் தொடர்பாக இதுவரை ஆங்கிலத்தில் வெளிவந்துள்ள பெரும்பாலான அரிய நூல்கள் தொகுக்கப் பெற்றுள்ளன.

இந் நூலகத் தொகுப்பின் பெருஞ் சிறப்பு இங்குள்ள பழைய தமிழ் இதழ்களின் தொகுதிகளாகும். தமிழ் நாட்டில்

வேறெங்கும் காண்டற்கரிய உதயதாரகை, விவேக சிந்தாமணி, விவேக போதினி, ஞான பானு, ஜன விநோதினி, குடியரசு, குமரன், நவசக்தி, மணிக்கொடி போன்ற இதழ்களின் தொகுதிகள் அரும்பாடுபட்டுத் தொகுக்கப் பெற்றுப் பாது காக்கப் பெறுகின்றன. ஆயிரத்துக்கு மேற்பட்ட தமிழ் இதழ் களின் தனிப்படிகள் திரட்டிவைக்கப் பெற்றுள்ளன.

இவை மட்டுமன்றித் தமிழ்ப் புலவர்களின் கடிதங்கள், புகைப் படங்கள், வாழ்க்கைக் குறிப்புகள் தொகுக்கும் பணி யிலும் நூலகம் ஈடுபட்டுள்ளது.

இத்தகைய அரிய நூலகத்தில் தற்போது 950க்கு மேற் பட்ட உறுப்பினர்கள் உள்ளனர். வழங்கும் பகுதியில் உள்ள நூல்களை மட்டும் அவர்கள் வெளியே எடுத்துச்சென்று படிக் கின்றனர்.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இதுகாறும் இந் நூல் நிலையத்தைத் தனக்குக் கிடைக்கும் விற்பனை ஊதியத்தில் அறத்திற்கென ஒதுக்கிவைக்கும் பாதித் தொகையிலிருந்தே நடத்தி வருகிறது. மைய மாநில அரசுகள் கடந்த ஒரு சில ஆண்டுகள் ஒரு பகுதி மானியமாக வழங்கி வருகின்றன.

இந் நூல்நிலயம் தொடங்கி இவ்வாண்டு ஆகஃச்டு 24இல் இருபதாண்டுகள் நிறைவுறுகின்றன. உலகில் வேறெங்கும் ஒரு புத்தக வெளியீட்டு நிறுவனம் இத்தகையதொரு நூலகத்தை நடத்தி வருவதாகத் தெரியவில்லை. இவ்வளவு சிறப்பாக இதனை நடத்திவரும் கழகம் இந் நூல் நிலயத்தின் 20ஆம் ஆண்டு நிறைவு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடத் திட்டமிட்டுள்ளது. விழாவை யொட்டி நூலகப் பணியின் சிறப்பை எடுத்துக்கூறும் மலர் ஒன்று வெளியிடப் பெறும். அம் மலருக்குத் தமிழன்பர்கள் தங்களாலியன்ற அளவு விளம்பரங் களைத் திரட்டித்தர வேண்டும்.

நூலகத்தின் வளர்ச்சிக்காகப் பல திட்டங்கள் வகுக்கப் பெற்றுள்ளன. நூலகம் வளர நூல்கள் பெருகுகின்றன. நூல்கள் பெருக இடம் தேவைப்படுகின்றது. நூலகத்தின் பின் பகுதியை விரிவு படுத்தவும் பழைய நூல்களைப் படியெடுத்துக் காக்க உதவும் படக் கருவியைப் பெறவும் ஒரு நூறாயிரம் ரூபாய் தேவைப்படுகின்றது. தமிழக அரசும், நடுவணரசும், தமிழகச் செல்வர்களும் போதிய பொருளுதவி செய்ய முன்வர வேண்டும் எனக் கேட்டுக்கொள்கிறேன்.

ஆசிரியர்

# சிவஞானபோத ஆராய்ச்சி

[அருட்டிரு அழகரடிகள்]

(சிலம்பு ௨௨, பரல் ௧௧, ௨௬௪ஆம் பக்கத் தொடர்ச்சி)

தவம் செய்பவர் அவற்றிற்குரிய புண்ணிய உலகத்தைச் சார்ந்து அங்கிருந்து அப்படியே பற்றறற்றுச் சிவஞானம் பெற்று, விடுதலை அடைவதும் உண்டு. புண்ணிய உலகத்திலேயே சிவ ஞானம் பெற வாய்ப்பில்லையானால், இவ்வுலகத்திற் பிறவியில் தோன்றுவதும் உண்டு. சகலர்க்கு அவர்போலும் பெரியவர் களை இயக்கி இறைவன் பின் நின்றுகொண்டு அப் பெரியவர்கள் மூலமாக ஞானம் உணர்த்துவர்; அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர்க்கு இறைவனே அருளுருவம் எடுத்து வந்தார்; பெரியவர்களுக்கு அப்படி வரக்கூடும். மற்றவர்கள் பிறவி யெடுத்து வருவதானால் ஒரு தவக்குலத்திலேதான் தோன்று வார்கள். சிவசத்தை அறிந்து நுகர முற்படுவார்கள்; மறை நூல் ஆராய்ச்சிகளே கூட இவ்வுண்மைகளை விளக்கிவிடும்.

"தவஞ்செய்தா ரென்றுந் தவலோகஞ் சார்ந்து
பவஞ்செய்து பற்றறப்பா ராகத்—தவஞ்செய்த
நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நன்னுதலைக்
கற்றூர்கும் சொல்லுமாங் கண்டு."

இவ் விளக்கச் செய்யுளில், 'தவலோகம்' என்றது 'சாலோகம் சாமீபம் சாருபம்' என்னும் படிநிலைகளை விளக்கும்; இவை முறையே சரியை கிரியை யோகங்களைச் செய்தோர் அடைவன; 'தவம் செய்த நற்சார்பு' என்றது, நற்குடி, பக்குவ முதிர்ச்சியுடைய நன்மக்கள் தோன்றும் குடியாதலால் 'தவம் செய்த நற்சார்பு' எனப்பட்டது. இதனால் வெற்றுச் சாதியுயர்வு இங்குக் கூறப்படவில்லை. பக்குவ முதிர்ச்சியாளர் வந்து பிறக்கும் இடமே மனிதரில் மேற்குலம்; நற்சார்பு என்றது இது! நற்குலத்தில், வந்தவர் ஞானம் செய்து வீடுபெறுவ ராதலின் அருத்தாபத்தியால், இறைவன் அருள் சாராத இடம் அதாவது தக்கோர் பிறவாத குலமே 'இழிகுலம்' என்பதும் பெறுதும்.

உடலூழ் என்னும் பிறவி வினை (பிராரத்துவம்) அவர் களுக்கு எளிதாகவே மெலிந்தியங்கும்; அதிற் பற்றை அழத்தல் ஞான நிலையில் எளிதாகக் கூடிவிடும். ஏனை வினைக

ளாகிய தொகுப்பு வினை (சஞ்சிதமும்), தக்கையால் முடிந்து விடும்! மேல் வினையும் (ஆகாமியமும்), குருவருளாற் பெற்ற ஞானத்தால் உண்டாகாது. மூவகை வினைகளும் இவ்வாறு நீங்கிவிடும்.

ஞானம் என்னும் சத்தின் உணர்வில் பழகும் பயிற்சி, மெய்யுணர்வைச் செய்து, விரைவில் விடுதலையைக் கூட்டும்.

சிலர் நல்வினைகளே வீடுபேற்றை அடைவிக்கும் என்பர்; நல்வினைகள் செய்தால் உலக இன்பம் உண்டாகும்; வீட்டின்பம் உண்டாகாது. அந்த உலக இன்பமும் தேவையான துன்பத்தை உண்டாக்கியே பின்பு இன்பத்தைக் கொடுக்கும். இது, பசி தோன்றி உணவினால் இன்பம் உண்டாகி, மீண்டும் பசி தோன்றி அப்படியே தொடர்ந்து வருவதைப் போன்றது. வினைகளால் வரும் இன்பங்கள் இத்தகையன. அதனாலேயே உலக இன்பத்தில் உலகத் துன்பமும் இணைந்து, அவற்றிற்குக் காரணமான இருவினைகள் (உடலூழ்) எனத், தொடர்ந்து, இரட்டையாகக் கொள்ளப்பட்டன. இதற்கோர் எடுத்துக்காட்டுச் செய்யுள் இப் பிரிவில் வந்தது.

> "பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கும்
> இசைத்து வருவினையில் இன்பம்;—இசைத்த
> இருவினை யொப்பில், இறப்பில் தவத்தான்
> மருவுவனும் ஞானத்தை வந்து."

வேள்விகள், பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்குமாறு, நிலையில்லாத இன்பம் தரும். வேள்விகளைச் சிறப்பிக்கும் 'பாட்டாச்சாரியன் மதம்' இதனால் நிலையில்லாததாயிற்று; வீடு பேறு எய்துவதற்கும் உதவாததாயிற்று. நல்வினை தீவினை என இரட்டையாக வருதலாலும் ஒன்றுக்கொன்று காரணமாய் முடிதலாலும் 'இசைத்து வரும் வினை' என்று வினையைக் கூறினார்; 'இரட்டையாய்ச் சொல்லப்பட்டு வரும் வினை' என்பது பொருள். அப்படித் தம்முள் இசைந்தவை வினைகள்; 'இறப்பில் தவம்', மிக்க தவம்; தவம், மிக்க தவமாய் மாறும் போது அமிழ்தம் போல் அது பயன்பட்டு நிற்கிறது; அமிழ்தத்திலும் அது தேவர் அமிழ்தம்; அமிழ்தம் மூப்பையும் இறப்பையும் வருவியாமையோடு, இன்பமும் பயந்து நிற்கும். புண்ணிய உலகத்திலும் பதவி யின்பங்களை உண்டாக்கும்; தவம் மறுமையிலும் இப்படி இன்பம் பயக்கும். 'ஞானம்' ஒன்றுதான் வீடு பேற்றைப் பயக்கும். இந்த இருவகையின்பங்களும் வீட்டின்பத்துக்குத் தடையே; வினைகளிலும் பற்றறுதல் 'வினையொப்பு' எனப்படும்.

நல்வினை ஒரு பொன் விலங்கு. தீவினை ஓர் இரும்பு விலங்கு; இரண்டும் விலங்குகளே; ஆதலால் இரண்டும் தடைகளே. இரண்டும் விலங்குகள் என்று ஒத்தறியப்படுதலால் 'இருவினை யொப்'பாகி மலபரிபாகத்தைக் காட்டும்.

நன்மையும் தீமையும் இரட்டைகளாய்க் காரண காரியங்களாய் வருதலால், இத் தடைகளை நீக்கவேண்டும்; நீக்குதலாவது, அவ் விரண்டும் காரண காரியங்களாய் நிகழ்தலை யுணர்ந்து இரண்டிலும் உயிர் பற்று விடுதலாகும். இவ்வாறு நேரும் இருவினையொப்பில், உயிரின் பக்குவந் தெரிதலால் அந் நிலையிற் குரு எதிர்ப்படுவார்; 'பதிஞானம்' என்னும் சத்தியைப் பதிப்பார். உயிரும் அருள் தெளிவு பெற்று வீட்டின்பம் எய்தும்.

இவ்வாற்ருல், இருவினை ஒப்பின் மலபரிபாகம் உற்றுச் சத்திநிபாதம் என்னும் சத்தி பதிதலாகிய ஞானத்தை அடைதல் குருவருகையால் முடிகிறது.

இரண்டாம் பிரிவு:

'குருவாக வருவோர் நம்மனோரில் ஒருவராதலே போதும்' என்று 'சாங்கியர்' 'நையாயிகர்' குறிப்பர்; அற்றன்று, 'இறைவனே குருவாகி வருதல் தக்கதாயிருக்கிறது' என்று இவ் விரண்டாம் பிரிவு விளக்கியது.

சரியை கிரியை யோகம் என மூன்றும் முதிர்ந்தபோது ஞானத்தின் அவாவுதல் உயிர்க்கு உண்டாகும்; அந் நிலையில், இதுகாறும் அதன் அறிவு நிலைக்கு உதவி வந்த முதல்வனே, இதற்கும் உதவுதல் பொருத்தம்.

காரணம், உயிரோடு அயன்மையில்லாமல் அதன் அறிவு நிலையோடு ஒன்றி உணர்வுகளைக் கவனித்து வருபவன் கடவுளே; ஆசிரியர் இப்படி ஏதுக் கூறினர்.

இறைவன் பாலில் நெய்போல உயிர்களிடத்தில் இதுவரையில் மறைந்திருந்தான்; பக்குவமுற்ற இக் காலத்தில், தயிரில் நெய் போல அவனேதான் விளங்கி வரவேண்டும். வேறு யார் வருவர்?

'சமய குரவராகிய நால்வரும் குருமாராய் இருத்தலால் அவரையே குரு எனக் கூறலாமே' என்று தோற்றும். அவரையும் இயக்கி நம்மைத் தெளிவிப்பவன் இறைவன் என்றே தெளிவு பெறுக! தெளிவு பெருதவரே 'நால்வரைக் குரு' என

எண்ணுதவர்; ஏனென்ருல், நால்வர்க்கும் குருவாய் நின்றவர் இறைவனே! நால்வர் நமக்குத் தெரிவிப்பனவும் இறைவன் தெரிவிப்பனவே என்பதையும் இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

உயிர்களிடத்தில் அறியாமையும் இருக்கிறது; அறிவும் இருக்கிறது. இவற்றில் அறிவு உருவாக இருப்பதே இறைவன் இயல்பு. ஆதலால், 'சைதன்ய சொரூபியாய் நிற்றலான்' என்று ஏதுவில் வந்தது. அது மாசு இல்லாத நிலை; மாசிலா மணியின் நிலை; எளிதாக இரங்கி ஆட்கொள்ளும் நிலை; இயல்பாகவே இறைவன் பாசங்களில் நீங்கியிருத்தலால், அப் பேரருள் தோன்றுகிறது; எளிமையும் விளைகிறது; ''எளியையாய் ஆண்ட ஈசனே, மாசிலாமணியே'' என்ருர் மாணிக்கவாசகரும்!

'சில உயிர்களுக்கு இறைவன் குருவாய் வந்து ஞானம் நிகழும்; சிலர்க்கு இறைவன் குருவாய் வராதபோதே ஞானம் நிகழ்தலின் உண்மை எப்படி? சிலர்க்குக் குழந்தையாய் இருக்கும்போதே எதையோ காண்பதனுல் ஞானம் உண்டாய் விடுகிறதே!' என்றெல்லாம் தோன்றலாம். எல்லாம் இறைவனுலேயே உண்டாகின்றன என்பது இதற்கு விடை; அதனுவே தான் மக்களே குருவாய் வருவார் என்பதை மாற்றி, இறைவனே மூவகையார்க்கும் குருவாய் வருவான் என்று சொல்வதாகும். இதனை விளக்கிக்கொண்டு ஒரு செய்யுள் வரும்.

> ''மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்
> கஞ்ஞான அச்சகலர்க் கக்குருவாய்—மெய்ஞ்ஞானம்
> பின்உணர்த்தும் அன்றிப் பிரளயா கலருக்கு
> முன்உணர்த்தும் தான்குருவாய்; முன்.''

மெய்ஞ்ஞானம் தானே விளையும் விஞ்ஞானகலர்க்கு 'விஞ்ஞானகலர்' என்னும் ஒருவகை உயிர்ப் பிரிவினர்க்கு (அவருள் அவராகவே தன்மையில் நின்று உண்மை ஞானத்தை விளைவித்தலால்) அது, தானே விளைவதுபோலத் தோற்றும்; அன்றி, பிரளயாகலருக்குத் தான் குருவாய் முன் உணர்த்தும் அந் நிலையல்லாமல் 'பிரளயாகலர்' என்னும் வேருேர் உயிர் வகையார்க்கு இறைவனே குருவாய் எதிர்முகமாக எழுந்தருளி முன் நின்று ஞானம் உணர்த்துவன்; அஞ்ஞான அச் சகலர்க்கு அக் குருவாய் மெய்ஞ்ஞானம் பின் உணர்த்தும்—மும்மல அறியாமையையும் உடைய 'சகலர்' என்னும் மற்றொரு வகையான உயிர்களுக்கு அவர்போலும் வடிவில் குருவாய்த் தோன்றி (அவ்

வடிவை இயக்கிப்) பின் இருந்து தமது மெய்ஞ்ஞானத்தை இறைவன் உணர்த்துவான். முன்—இவ் வேறுபாடுகளைக் கவனித்துக் கொள்க.

மெய்ஞ்ஞானம் தானே விளையும் என்றமையால் அதன் எளிமை தெரிந்தது. "உள்நின்று அறுத்தருளி" என்பார் சிவப்பிரகாசர். சகலரிடத்தில் அறியாமை மிகுதியாய்த் தோன்றுதலால் அவர்க்கே அதனை அடைமொழி ஆக்கி, 'அஞ்ஞான அச் சகலர்' என்றார். சுட்டு அத் தன்மையுடையோர் என்னும் பொருட்டு. அக் குருவாய் என்னும் சுட்டு, நால்வரைப் போல மனித வடிவில் வருபவரே என்னும் கருத்தில் வந்தது.

இச் செய்யுள் விஞ்ஞானகலர்க்கு உள்நின்று எளிதாகத் தன்மையில் உணர்த்தியும், பிரளயாகலர்க்கு உருவெடுத்து முன்னிலையில் உணர்த்தியும், சகலர்க்கு அவரைப்போல் மனித வடிவில் உள்ளவரையே இயக்கிப் படர்க்கையில் நின்று உணர்த்தியும், இறைவன் ஞானம் உணர்விக்கும் நிலை தெரிந்தது. மூவகையிலும் வருவது இறைவனே என்பதை இச் செய்யுளால் அறிகிறோம்.

இவற்றில் இறைவனே பிரளயாகலர்க்கு முன்னிலையில் வருவான் என்னும் இறைவடிவம் எண்ணிப் பார்க்கத்தக்கது. நால்தோளும் முக்கண்ணும் கறைமிடறும் இறைவனுக்கு உண்டு. நால்தோள் படைக்கும். முக்கண் காக்கும். கறைமிடறு அழிக்கும். முத் தொழிலின் அடையாளமாக இவற்றை இறைவன் கொள்ளுகிறான். தோள்கள் தொழிலுக்குரியனவாய் உழைப்பு ஆக்கத்துக்குரியதாயிற்று. படைப்புக் கடவுளும் இதனால் நான்முகன் எனப்பட்டான். முக்கண்களில் நெற்றிக் கண் சிறப்பாக அருஞ்செயலுக்குரியது; மின் வடிவு உடையது; மற்றைக் கண்கள் ஞாயிறும் திங்களுமாகும்; இந்த மூன்று கண்களும் உலகைக் காத்து வருதல் தெரிந்ததே. கறைமிடறு தேவர்களுக்கு அமிழ்தம் வழங்கியபோது அசுரர்களுக்கு நஞ்சு தந்து அழித்தது. இரண்டும் கருணையே; அழிப்புத் தொழிலைக் கருணையாலேயே ஆண்டவன் நிகழச் செய்து உயிர்களைப் பிறவிக் கொதிப்பிலிருந்து இளைப்பாற வைக்கிறான்.

இங்ஙனம் முத்தொழிலும் இவை நடத்துதலின், சிறப் படையாளமாய் இருத்தலால் இறைவன் தொழில் புரிய உருவமெடுக்கும்போது இவ் வடிவில் எடுத்திருக்கிறான். ஆகவே இவை இறைவடிவமாயின. இவை இறைவன் கருணையில் நிகழ்வன ஆதலின் இறைவனுக்கு வடிவங்களாயின.

இனி, 'விஞ்ஞானகலர்' என்னும் சொல் ஞானச் சிறப்புக் குரிய உயிர்களின் கலைகளாகிய உடம்புடையவர் எனவும், 'பிரளயாகலர்' என்பது புரட்சியில் ஊழில் அமையும் கலைகளோடு கூடிய உடம்புடையவர் எனவும், சகலர் என்பது பிறவி உடம்பை உரிமையாகக் கொள்வோர் எனவும் பொருளாகும்.

ஒரே இயல்பாய் ஞானத்தை உணர்த்தாமல் இவ்வாறு மூவகைப்படுத்து ஏன் உணர்த்த வேண்டும் என்று சிலர்க்குத் தோன்றும். உயிர்கள் ஒரே தன்மையன அல்ல. அதற்கு ஏற்றபடி படிமுறையில் உணர்த்தப்பட்டன. அதற்காக உள்ளும் முன்னும் பின்னும் உணர்த்த நேர்ந்தது. இதற் கொரு செய்யுள் :

"அறிவிக்க அன்றி அறியா உளங்கள்
செறியுமாம் முன்பின் குறைகள்—நெறியிற்
குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் விடென்
குறைவில் சகன் சூழ்கொள் பவர்க்கு."

பொருள் :

அறிவிக்க அன்றி அறியா உளங்கள்—உயிர்கள் இறைவன் அறிவித்தாலல்லாமல் தாமே அறியமாட்டா; முன்பின் குறைகள் செறியும்—அப்படி உள்ள உயிரின் அறிவு பல தரமாக இருத் தலால் அவற்றின் குறைகளெல்லாம் ஒரே வகையான அறிவிப் பினுல் அமைவதாயினும் உள்நின்று உணர்த்துதலாலும் முன் னின்று உணர்த்துவதாலும் பின்னின்று உணர்த்துவதாலும் சிலர்க்குக் குறைகள் நிறைவிக்கப்படும்; நெறியில்—அம் முறை மையில்; குறைவில் சகன் சூழ்கொள்பவர்க்கு—கடவுளுடைய குறைவில்லாத அருள் ஞானமொழியைக் கொள்ளும் உயர்ந்த உயிர் வகையினர்க்கு; குறையுடைய சொல் கொள்ளார்—அவர்கள் குறைவான அருள்மொழியைக் கொள்ளாராதலால் உள்நின்றே உணர்த்த வேண்டியதாயிற்று; கொள்பவத்தின் விடு என்—கொண்ட பிறவியிலேயே அவர்களுக்கு வீடு உண் டாகிவிடும் என்று அறிந்து கொள்வாயாக!

இக் காரணத்தால் வேறு வேறு வகையில் நின்று இறைவன் உயிர்களுக்கு மெய்ஞ்ஞானம் வருவிக்க நேர்ந்தது என்பது புலப்படும்.

கொள்பவத்தின் வீடு என்பதற்குக், 'கொண்ட பிறவி யிலேயே விடுதலை' என்று பொருள் கொள்ளுதலே பொருந்தும்

உயிர்களின் அறிவு நிலைக்கேற்ப அறிவுறுத்த வேண்டியிருத்தலின் "பந்தமும் வீடும் தெரிபொருட் பனுவற் படிவழி சென்றேறி" எனத் திருவிசைப்பாவிலும் வந்தது. ஒருவகை உயிர்களுக்குக் கூறியது மற்றவகை உயிர்களுக்கும் பொருந்தும்.

அப்படியானால், உண்மையில், இல்லாத ஒன்று, 'சகலர்க்குக் குருவில் எழுந்தருளியது என்பதை எப்படி ஒத்துக் கொள்ள முடியும்? தோன்றாத ஒன்று பின்பு தோன்றியது என்பது எப்படி?' எனச் சிலர் எண்ணக்கூடும். இதனை ஓர் எடுத்துக் காட்டினால் ஆசிரியர் விளக்குகிறார். பெண்களுக்குக் கண்ணீரும் முலைப்பாலும் முன்பு தோன்றாதவை. குழந்தைகளிடத்தில் அருள் தோன்றுகிறபோது முலைப்பால் தோன்றுகிறது. முன்னில்லாத கண்ணீர், உருக்கம் தோன்றுகிறபோது, தானே தோன்றி விடுகிறது. எப்படி வந்தன? அவைபோல முன்னால் தோன்றாத பொருளாய் இருந்த இறைவன், பக்குவ நிலையில் தானே உருவாகித் தோன்றுகிறான்; அவனே உருவாகித் தோன்றாவிட்டால் அவனை யார் அறியமுடியும்?

நீரின் நடுவே வெளி உள்ளது. இல்லாவிட்டால் மீன் முதலானவை நீந்த இடமிராது; நீர் ஓர் எல்லை உடையது; இடையில் உள்ள அந்த வெட்ட வெளியில், வரம்புடைய நீர்க்கு நிழலும் இருக்கும்; ஆனால், அந்த நிழல் கண்ணுக்குத் தெரிவதில்லை; ஆயினும் அந் நிழல் எங்கே போய்விடும்? நீரிலேதான் அடங்கியிருக்க வேண்டும்; அதுபோல, முன்பு இறைவன் ஆன்மாவின் உள்ளேயே மறைந்திருந்தான் என்று அறிய வேண்டியிருக்கிறது. இப்படி அருவமாய் நிற்பவன் பின்பு உருவாய்த் தோன்றி விடுவான்; இவ்வுண்மைகளை விளக்க,

"இல்லா முலைப்பாலும் கண்ணீரும் ஏந்திழைபால்
நல்லாய் உளவாமால்; நீர்நிழல்போல்—இல்லா
அருவாகி நின்றானை யாரறிவார்? தானே
உருவாகித் தோன்றானேல் உற்று"

என்று வேறொரு செய்யுளும் இப் பிரிவில் வரும்.

இதனில் 'இல்லா' என்பது, 'முன் தோன்றாத' என்னும் பொருட்டு. ஏந்திழை—ஏந்து+இழை. அணிகலன்களை ஏந்தியவள் என்னும் கருத்தில் பொதுவாகப் பெண் என்பதற்காக வந்தது. நல்லாய், நல்ல மாணாக்கரே! உளவாமால்—உள்ளனவாகுமாதலால்; உற்றுத் தோன்றானேல், உருவமுற்று எழுந்தருளித் தோன்றாவிட்டால்!

உருக்கமும் அருளும் தோன்றியபோது, முன்தோன்ருத கண்ணீரும் முலைப்பாலும் தோன்றுகின்றன. அப்படிப் பக்குவ நிலையில் இறைவன் அருள் உள்ளத்தோடு தோன்றுவான் என்பது கருத்து.

மூன்ரும் பிரிவு :

'சிவசங்கிராந்த வாதி'யர்க்கு ஒரு நினைவு. 'உலக அறிவுகளை உயிர்க்கு விளக்குவன பொறிகள்; அக் கருவிகளே அவ்வுயிர்க்கு மெய்ஞ்ஞானத்தையும் ஏன் உண்டுபண்ணக் கூடாது?' என்பது.

நூற்பாவில், 'ஐம்புல வேடரின் அயர்ந்தனை' என்று வந்த தற்கு, மேற்கோளில் ஆசிரியர், அந்த ஐம்பொறிகளால் மயக்க மடைதலும் உயிர்களுக்கு உண்டு என்பார்; ஐம்பொறிகளால் உலக அறிவை உயிர்கள் தமக்குள் விளக்கிக்கொள்ளுமே யன்றித் தம் தன்மைகளையும் விளங்கிக்கொள்ள மாட்டா என்று இந்தப் பிரிவில் எடுத்துக்கொண்டார்.

மேற்கோளுக்கு அவர் காட்டும் காரணம், வருமாறு : ஒரு பளிங்கு மணியில் சூழப் பல நிறப்பொருள்களை வைத்தால் அந்த நிறங்களெல்லாம் அந்தப் பளிங்கு மணியில் தெரியும்; மாற்றித் தெரிவிக்க அந்தப் பளிங்கு மணியினுல் முடியாது; காட்டியபடியே காட்டிக்கொண் டிருக்கும். அதுபோல, பொறி களாகிய கருவிகளும் உலக அறிவுகளை உயிர்க்கு ஐந்து வகை களாக அறிவிக்கும்; அப்படியே அறிவித்துக்கொண்டிருக்கும்; உயிரின் இயல்புகள் இன்றும் உள்ளன; அவை, யெல்லா வற்றையும் புலப்படுத்த மாட்டா. ஆன்ம நிலைமையைக் காட்டாமையோடு, உலக அறிவுகளையே மேலிட்டுங் காட்டும். இக் கருத்தும் இக் காரணத்தால் தெரிகிறது. இங்ஙனம் 'சிவ சங்கராந்த வாதி'யர்க்கு இப்பிரிவு மறுப்பு விடை கூறுகிறது.

பதி ஞானத்தை உண்டாக்க அக் கருவிகளுக்கு அறிவு இல்லை; அவை அசத்துப் பொருள்கள்; ஆதலால், மெய்ஞ் ஞானத்தை உயிர்களுக்கு உண்டாக்க அதனை உடைய சிவ சத்துத் தேவையாயிருக்கிறது.

"பன்னிறங் காட்டும் படிகம்போல் இந்திரியம்
தன்னிறமே காட்டுந் தகைமைநேர்ந்து—பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்போய்யா மெய்கண்டான்
மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு."

(தொடரும்)

# சப்பானிய நெடுங்கணக்கில் தமிழ் ஒலிநிரல்*

[திரு. லோகேஷ் சந்திரா, எம்.பி. (மாநிலங்களவை) புதுதில்லி]

(முன் இதழ் ௫௫௬-ஆம் பக்கத் தொடர்ச்சி)

சப்பானிய வரிவடிவ நிரல் முற்றிலும் தமிழைப் பின்பற்றியே அமைந்துளது. சப்பானிய மொழியில் வழங்கும் g, b போன்ற ஒலிகளுக்குத் தனி வரிவடிவங்கள் அமைக்கப்பட்டிருக்கலாம். ஆனால் தமிழிற்கு இணையாக விளங்க வேண்டும் என்ற நோக்கில் அது தவிர்க்கப்பட்டது. சப்பானிய மொழிக்கு அடிப்படை ஒலிகளான g, s, d போன்றவற்றைக் குறிக்கக் குறியீடுகளை அவர்கள் பயன்படுத்தியிருக்க வேண்டும். சித்தம் நாகரியை அறிந்திருந்தும், அதனோடு நெருங்கிய தொடர்பிருந்தும், சப்பானிய மொழி தமிழ் முறையினை ஏன் மேற்கொள்ள வேண்டும்? சப்பானிய நெடுங்கணக்கை உருவாக்கிய கோபோ டெய்ஷி என்பவர் ஷிங்கூன் பிரிவின் நிறுவனரும் ஆவார். காஞ்சியைச் சேர்ந்த வஜ்ரபோதி என்பவரால் இப்பிரிவு தொலைகிழக்கில் தொடங்கப்பட்டது. தென்னிந்தியாவில், தமிழ் நெடுங்கணக்கு தமிழ்மொழிக்கும், கிரந்தம் (அ) சித்தம் சமய நூல்களைச் சமற்கிருதத்தில் எழுதவும் பயன்படுத்தப்பட்டு வந்தன. சமயச் சார்பிலா வரிவடிவம், சமயச் சார்புடைய புனித வரிவடிவம் என்ற அளவிற்கு வேற்றுமையை இந்நிலை வளர்த்தது. தமிழை உலகியல் பற்றியனவற்றிற்கும், கிரந்தத்தை மந்திரங்களை எழுதுவதற்கும் பயன்படுத்திய வஜ்ரபோதி என்பவரால் இவ்விருமைக் கவர்நிலை தொலைகிழக்கிற்கும் கொண்டுசெல்லப்பட்டிருக்க வேண்டும். தமிழைப் பின்பற்றி, சப்பானிய நெடுங்கணக்கை கோபோ டெய்ஷி அமைத்ததற்குரிய காரணத்தை இதன்வழி பெறக்கூடும். கோபோ டெய்ஷிக்கு ஹுய்க்யோ (Huikuo) என்பவர் தமிழைக் கற்பித்தார். அவருக்கு அவருடைய ஆசிரியர் அமோகவஜ்ரா (Amoghavajra) தமிழைப் பயிற்றுவித்தாராம்.[9] அமோகவஜ்ரா (705-774) வஜ்ரபோதியினால் (d. 741) தேர்ந்தெடுக்கப்பட்ட மாணவர் ஆவார். வஜ்ரபோதி 720இல் தென்னிந்தியாவிலிருந்து கடல் வழியே கேனடோனை அடைந்தவர்.

அந்தணராகிய வஜ்ரபோதியின் தந்தை காஞ்சியின் அரசருக்கு ஆசிரியராக விளங்கியவர்.[10]

---

9. Yoshitake, o. c., p. 30.
10. Chou yi-liang, Tantrism in China, H F AS. 8 (1945). 272-273.

* தமிழாக்கம்: செல்வி சத்தியம். ஆக்கத்துணை: டாக்டர். க. சஞ்சீவி.

காஞ்சிப் பல்லவ மன்னர்கள் கல்வியைப் புரப்பதில் பெரும்பேர் பெற்றவர்கள். இச் சிறப்பினால் இந்தியாவின் ஏழு புனித நகர்களில் காஞ்சியும் ஒன்றாக விளங்கிற்று. கல்வியின் முதன்மை நகராக விளங்கிய காஞ்சி, (nagarīṣu kāñcī) தொலை கிழக்கில், பண்பாட்டுப் பரவலுக்கும் காரணமாக விளங்கிற்று என்பது தெளிவு. காஞ்சி அரசுக் குடும்பத்தினரை உறுப்பினராகக் கொண்ட போதிதர்மா, ஐந்து அல்லது ஆறும் நூற்றாண்டில் சீன நாட்டிற்கு, தயான பௌத்தத்தை அறிமுகப் படுத்தியது.[11] 501-507 கால எல்லையில், தென்னிந்தியாவைச் சேர்ந்த தர்மருசி (Dharmaruci), மூன்று சமற்கிருத நூல்களைச் சீன மொழியில் மொழிபெயர்த்தார்.[12]

கி. பி. 693-713 கால எல்லையில், தென்னிந்திய அந்தணராகிய போதிருசி (Bodhiruci), 53 சமற்கிருத நூல்களைச் சீன மொழியில் மொழிபெயர்த்தார். இவர் கி. பி. 727இல் தம் 156வது வயதில் இயற்கை எய்தினார்.[13] தென்னிந்திய ஆசிரியர்கள் சீனாவிற்குச் சென்று பணிபுரிதல் ஒரு மரபாகத் தொடர்ந்தது. இதில் வஜ்ராயணத்தைச் சீனாவிற்கு அறிமுகப் படுத்திய வஜ்ரபோதி பெறுமிடம் குறிப்பிடத்தக்கது. சீனாவிலிருந்து சப்பானுக்குச் சென்ற இவ் வஜ்ராயணம் தற்போது அங்கு முதன்மைப் பிரிவாக விளங்குகின்றது. மேலும் சப்பானியப் பண்பாட்டின் வளர்ச்சிக்குப் பல நிலைகளில் தொண்டாற்றி வருகின்றது.

தந்திரங்களின் யோகப் பிரிவாகிய வஜ்ரசேகர-தந்திரவினை அறிமுகப்படுத்திய சிறப்பு வஜ்ரபோதிக்கே உரியது. அப்போது வஜ்ரசேகரதந்திரம், தந்திரங்களில் மிக உயர்ந்த வளர்ச்சியாக விளங்கிற்று. அது சிக்கல் நிறைந்த தத்துவ முறையுடன் பயிலப்பட்டது. அதன் சிறப்பு வஜ்ரபோதிக்குப் பெரும்புகழைத் தந்தது. அவர் வழங்கிய கருத்துக்கள் நன்கு போற்றப்பட்டன. வஜ்ரபோதி தொலை கிழக்கில் தமிழ் நெடுங்கணக்குப் பரவுவதற்குக் காரணராக விளங்கினர் என்பதை உறுதி செய்யச் சான்றுகள் ஏதும் இதுகாறும் கிடைக்கவில்லை. குருபரம்பரை நூல்களிலோ, காலவரிசைக் கோப்பிலோ இதற்குரிய சான்றுகள் இல்லை. ஆயின், சப்பானிய நெடுங்கணக்கு அமைப்பு முறையை நோக்கி இக் கருத்து ஊகிக்கப்பட்டது.

---

11. Jan Fontein & Money L. Hickman, Zen Painting and Calligraphy, Boston 1970, p. xiv, 49-51.

12. Bunyiu Nanjio, A catalogue of the Buddhist Tripitaka, Col 426 no. 111.

13. Bunyiu Nanjio, o. c., col. 442 no. 150.

எதிர்காலத்தில் இக் கொள்கையினை நிறுவும் சான்றுகளைச் சீன—சப்பானிய மரபில் அறிஞர்கள் காணக்கூடும்.

ஹியான் காலப்பிரிவின் (Heian period) தொடக்கத்தில் (794) ஐந்தாம் தரத்திற்கு மேற்பட்ட குடும்பங்களைச் சார்ந்த சிறுவர்களுக்கு மட்டுமே கல்வி யுரிமையாக்கப்பட்டிருந்தது. சாதாரண பொதுமக்களின் குழந்தைகள் கல்வி கற்க எவ்வித முயற்சியும் எடுக்கப்படவில்லை. இம் முயற்சியில் ஈடுபட்ட முதல்வர் கோபோ டெய்ஷி என்பவரே. இவர் க்யோடோவில், டோஜி மடத்தை அடுத்து, பொதுக்கலை, அறிவியல் நிறுவனம் (Shugei Shuchi-in) ஒன்றை நிறுவினார்; பொதுமக்களின் குழந்தைகளுக்கும் கல்வியை உரிமையாக்கினார்.

உலகியல், சமயம் இருநிலைகளிலும் கல்வி பிரிக்கமுடியாத பங்கு பெற்றது. இவ்வண்ணம், சப்பானில் கல்வியை மக்கட்குப் பொதுவுரிமையாக்கினார் கோபோ டெய்ஷி. கல்வியின் முன்னேற்றத்திற்காக, சிக்கலான சீனமொழிக் கருத்துக் குறியீடுகளிலிருந்து, எளிய சப்பானிய நெடுங்கணக்கைக் கோபோ டெய்ஷி உருவாக்க முனைந்ததில் யாதொரு வியப்புமில்லை. இந்திய ஒலியியல் பற்றிய அறிவு அவருக்கு இம்முயற்சியில் பேருக்கம் அளித்தது. ப்ரஜ்ஞா (கி. பி. 733—782 இல் சீனாவிற்குச் சென்றவர்), முனிஷ்ரீ[14] (கி. பி. —811) ஆகியோரிடம் கோபோ டெய்ஷி சமற்கிருதம் பயின்றார். தமிழ் ஒலியமைப்பு முறையை வஜ்ரபோதி மூலம் அமோகவஜ்ராவும், அமோகவஜ்ரா மூலம் ஹுய்க்யோவும், ஹுய்க்யோ மூலம் கோபோ டெய்ஷியும் அறிந்தனர்.

தமிழ், சப்பானிய ஒலியமைப்பு முறையின் ஒப்புமை எதேச்சையாக ஏற்பட்டதன்று. இவ்வொப்புமை மேலும் ஆய்தற்குரியது. சப்பானிய மொழியின் தொன்மை ஒலிப்பு முறையை மீட்டுருவாக்கம் செய்வதற்கு இவ்வாய்வு புது வழிகளை வகுத்துத் தரும். மேலும் கால்க்ரேனின் (Kalgren's) ஆர்செய்க் (Archaic), தொல்சீன மீட்டுருவாக்கப் பணிக்கும் வரவேற்பு நல்கும்.

---

14. S. Yoshitake, o. c., p. 33. The dates are from Ninkaku Takata. The relations between esoterism and the Tathāgata-garbha theory as seen in the Shou-hu-kuo-chieh-chu-dharani-ching, Indogaku bukkyogaku kenkyū, Tokyo 1961, 19 (2) 34. Seishin Kato, Kobo-daishi and the Japanese culture, in Footsteps of Japanese Buddhism, Part II (The Shingon Sect), Tokyo 1937, pp. 30-31.

# புதுமணிப் பவளப் புன்மையும் புரைமையும்

[ஞா. தேவநேயன்]

அந்தோ! நிறைபுல மறைமலையடிகள் போலும், மும்மொழிச் செம்மலும், வேங்கடசாமி நாட்டார் போலும் விழுத்தமிழ்ப் புலவரும், சுந்தரம் பிள்ளை போலும் மெய்ப்பொருட் பேராசிரியரும், பூரணலிங்கம் பிள்ளை போலும் ஆங்கிலப் பேராசிரியரும், இராமசாமிக் கவுண்டர் போலுங் கல்லூரி முதல்வரும், மகிழ்நன் (சந்தோஷம்) போலும் உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியரும், பவானந்தம் பிள்ளையும், துடிசைக் கிழார் என்னும் துடிப்புமிக்க சிவனியத் தமிழரும் போலுங் காவல் துறைப் பேரதிகாரியும், சோமசுந்தரம் பிள்ளை போலும் இலக்கணப் பெரும்புலவரும், மாணிக்க நாயகர் போலும் பொறிவினை மாணிக்கமும், சோமசுந்தர பாரதியும் கா. சு. பிள்ளையும் உமா மகேசுவரம் பிள்ளையும் போலும் வழக்கறிஞரும், இன்று தமிழ் காத்தற்கில்லை.

தமிழ்நாடு நால்வாசங் கோட்டை ("நால்வாசங் கோட்டை நாலு பக்கமும் ஓட்டை") போல நாற்றிசையுந் திறந்த வெளி. அதில் தமிழ்த் துறையோ திறந்தமடம். அதிலுள்ள தமிழ்ப் புலவரோ ஊருக்கிளைத்த பிள்ளையார் கோயிலாண்டி. ஆங்கிலந் தெரிந்தாற் போதும். எவரும் எப் பதவியும் பெறலாம். எங்ஙனமும் எத்துணையுந் தமிழைக் கெடுக்கலாம். அதை எவருஞ் சொல்லப்புகின் உள்ளதும்போம். ஆதலால் ஒருவரும் வாய் திறப்பதில்லை. இதுவே விடுதலை மாட்சிமை.

இவ்வுலகில் 18ஆம் நூற்றுண்டு நடுவரை இருந்து வந்தது கைவினை நாகரிகம். அதன் பின்னர்த் தோன்றியது பொறிவினை நாகரிகம். முன்னதைத் தோற்றியவர் குமரி நாட்டுத் தமிழர்; பின்னதைத் தோற்றியவர் ஆங்கிலரும் அவர் வழியினரான அமெரிக்கரும்.

ஆங்கில ருயர்விற்கும் ஆங்கில வளர்ச்சிக்குங் கரணியங்கள் :

1. ஐபீரியர், (அறுவகுப்பாரான) கெலத்தியர், (ஆங்கலர், சாகசனர், சூட்டர் என்னும்) மூவகுப்புச் செருமானியர், தேனியர், நார்மானியர் முதலிய பல்வேறு மக்களினக் கலவையாயிருத்தலும் மதி விளக்கமும்.

2. தொழில் பற்றிய குலவகுப்பும் ஒற்றுமையும்.

3. பாராளுமன்ற ஆட்சியும், பொதுமக்களும் பெருமக்களாதலும்.

4. அடிமைத்தன வெறுப்பும் உரிமை யார்வமும்.

5. உருவ வணக்க வொழிப்பும் ஒரு தேவ வழிபாடும்.

6. மனவமைதிக்கும் முன்னேற்ற முயற்சிக்கும் துணை செய்யும் ஆங்கில நாட்டுச் சமதட்ப வெப்பநிலை.

7. தீவு வாழ்வும், கலப்படைப் பெருக்கமும், 18 ஆம் 19 ஆம் நூற்றாண்டுகளில் உலகில் $\frac{1}{3}$ பங்கைக் கட்டியாண்டு அறிவும் பொருளுக் பெருக்கிக் கொண்டமையும்.

8. ஆராய்ச்சியாளரையும் பேரறிஞரையும் வள்ளலாரையும் புதுப் புனைவாளரையும் புதுநாடு காணியரையும் அரசும் பொதுமக்களும் ஊக்கியமை.

9. இங்கிலாந் தாங்கிலர் 1765-இல் நீராவிச் சூழ்ச்சியப் பொறியும், 1829 இல் இருப்புப் பாதைச் சூழ்ச்சிய வண்டியும், 1831 இல் மின்னுக்கப் பொறியும் புதுப் புனைந்தமையும்; அமெரிக்க ஆங்கிலர் 1835 இல் மின் தொலைவரிப் பொறியும், 1876 இல் தொலை பேசியும், 1876 இல் ஒலிப்பதிவானும், 1878 இல் மின் விளக்கும், 1893 இல் திரைப்படமும், 1903 இல் வானூர்தியும், புதுப்புனைந்தமையும், 1970 இல் திங்களை யடைந்தமையும்.

10. 1875 இல் இலவசக் கட்டாயத் துவக்கக் கல்வியைப் புகுத்தினமை.

11. தகுதி பற்றிப் பதவியளித்து வருகின்றமை.

12. மூவேறு அரசியற் கட்சிகளும், தாய் மொழியையும் தம் இலக்கியத்தையும் பண்பாட்டையும் உயிர்நாடியாகக் கொண்டு போற்றி வருகின்றமை.

தமிழர் தாழ்விற்கும் தமிழின் தளர்ச்சிக்குங் கரணியங்கள்:

1. மூவேந்தரும் ஆரியக் குலவொழுக்கத் திட்டத்தையும் கூட்டுமத முறையையும் மேற்கொண்டு, ஒற்றுமையையும் அரசையும் இழந்தமை.

2. வேத மொழியையும் சமற் கிருதத்தையும் திருக் கோயில் வழிபாட்டு மொழியும் வீட்டுச் சடங்கு மொழியுமாக்கித் தமிழைத் தாழ்த்தியமை.

3. ஆரியர் வருகைக்கு முற்பட்ட பல்துறைத் தனித் தமிழிலக்கியம் அனைத்தும் அழியுண்ணவும், பிற்பட்ட நூல்களுட் பெரும்பாலன இறந்து படவும், விட்டமை.

4. சமற்கிருதச் சொற்களை வேண்டாது வழங்கி, ஆயிரக் கணக்கான அருந்தமிழ்ச் சொற்கள் வழக்கறவும் இறந்துபடவுஞ் செய்தமை.

5. ஒரே பேரினமாயிருந்த தமிழர் ஐம்பதிற்கு மேற்பட்ட அகமணப் பிறவிக் குலங்களாகப் பிரிந்து போனமையும், தத்தம் பெயருக்குப்பின் பிரிவினை முத்திரையாக வெவ்வேறு பொருளற்ற பட்டத்தைச் சேர்த்துக் கொண்டமையும், தமிழருள் தலையாய வகுப்பினரும் தம்மை அயலாருக்குத் தாழ்ந்தவராகக் கருதிக் கொள்ளுதலும்.

6. மூவாயிர வாட்டை யடிமைத் தனத்தால், தமிழருள் நூற்றிற் கைம்பது பேர் பகுத்தறிவு தன்மானம் நெஞ்சுரம் ஆகிய மூவகைக் கரணங்களை அறவே யிழந்துள்ளமை.

7. ஆங்கிலரும் நயன்மைக் கட்சித் (Justice Party) தலைவரும் கண் திறந்தும் கண்ணைமூடிக் கொண்டமை.

8. சுந்தரம் பிள்ளையும் மறைமலையடிகளும் விழிப்பூட்டி வழி காட்டிய பின்பும், வையாபுரிகளைப் போற்றிப் பல்கலைக் கழகத் துணைவேந்தராகவும் தமிழ்த் துறைத் தலைவராகவும் அமர்த்தி வருதல்.

9. சிறந்த புதுப்புனைவாளரான கோவைத் துரைச்சாமி நாயக்கரை ஊக்காது வயிறெரிய வைத்தமை.

10. தமிழ்நாட்டில் இந்தியைப் புகுத்திய இராசகோபாலாச்சாரியாரே, அதன் தீமையுணர்ந்து ஆங்கிலத்தையே இந்தியப் பொதுமொழியாக்க அறிவுறுத்தியும், பேராயத் தமிழர் இந்தியைக் குரங்குப்பிடியாய்ப் பிடித்தல்.

11. தமிழைத் தி.மு.க அல்லது அ.தி.மு.க. மொழியென்று பேராயக் கட்சித் தமிழரும் பிறரும் புறக்கணித்தல்.

12. அறிவியல் முறைப்பட்ட கொடிவழி (Geneological) முறை மொழிநூலைப் புறக்கணித்து, தமிழுக்குக் கேட்டை விளைக்கும் வண்ணனை மொழிநூலைத் தமிழ் நாட்டுப் பல்கலைக் கழகங்களிற் புகுத்தியிருத்தல்.

தமிழ் உலக முதன் மொழியும் உயர்தனிச் செம்மொழியு மாதலால், மென்மையும் தூய்மையும் அதன் இன்றியமையாத இயல்புகளாகும்.

குமரிநாட்டுத் தமிழர் வாயில் தோன்றிய ஒலிகள், உயிர் பன்னிரண்டும் மெய் பதினெட்டுமாக மொத்தம் முப்பதே. பிற மொழிகள் பிற்காலத்திலும் வன்புலங்களிலும் தோன்றியமை யால், அவ்வக்கால வளர்ச்சிக்கும் நில வியல்பிற்கும் தட்பவெப்ப நிலைக்கும் குரல் வாயமைப்பிற்கும் ஏற்றவாறு சில பல வல் லொலிகள் தோன்றியுள்ளன. ஆயினும், எம் மொழியிலும் எல்லா வொலிகளுமில்லை.

இலத்தீன் மொழியில் ஜ, ஷ, ழ, ற முதலியன இல்லை. கிரேக்க மொழியில் ஜ, ஷ, ச, ழ, ற, F முதலியன இல்லை. ஆங்கில மொழியில் ழ, ற முதலியன இல்லை. மிகுந்த ஒலிப் பெருக்கமுள்ள சமற்கிருதத்திலும் எ, ஒ, ழ, ற, ன, F, Z முதலியன இல்லை. ஒவ்வொரு மொழிக்கும் ஒரு தனி ஒலியுடல் உள்ளது. எல்லா மொழிகளிலும் எல்லா வொலிகளையுஞ் சேர்த்தல் இயலாது. சேர்ப்பின் மொழி மாறிவிடும்.

தமிழிலுள்ள ஒலிகளெல்லாம் மென்மையானவை. அதில் வல்லொலிகளைச் சேர்த்து வல்லொலி மொழியாக்கவிரும்புவது, மெல்லியலான பெண் மேனியை வல்லியலான ஆண்மேனி யாக மாற்ற முயல்வதொத்ததே.

தமிழ் முப்பான் மெல்லொலிகளே கொண்டதேனும், நம் முன்னோரான குமரிநில மக்கள், தம் நுண்மாண் நுழைபுலத் தால், அக் காலத்தில் மட்டுமன்றி எக்காலத்துந் தோன்றும் புதுப்புதுக் கருத்துக்களையெல்லாம் புலப்படுத்தத்தக்க சொற் களைத் தோற்றுவிக்குமாறு, ஏராளமான வேர்ச்சொற்களை யாக்கி யுள்ளனர். எடுத்துக்காட்டாகத் தொழிற் பெயரீறுகளை நோக்குக. தமிழிலுள்ள அளவு தொழிற் பெயரீற்றுவளம் வேறெம்மொழியிலு மில்லை.

ஒரு மொழியின் வளத்தைக் காட்டுவன அதன் சொற்களே யன்றி ஒலிகளல்ல. மொழி தோன்றியது சொற்களாகவே

யன்றி எழுத்தொலிகளாகவல்ல. இலக்கணம் ஏற்பட்டபோதே, சொற்கள் எழுத்தொலிகளாகப் பகுக்கப்பட்டன.

எ-டு: காகா—காக்கா—காக்கை, காகா —(காக)— காகம். க்+ஆ+க்+ஆ என்று தோன்றவில்லை.

சொற்களே பொருளுணர்த்தும்; எழுத்தொலிகளல்ல. ஓரெழுத்துச் சொல்லேயாயினும், பொருளளவிற் சொல்லே யன்றி எழுத்தொலியன்று. பலவெழுத்துச் சொல்லைத் தனித் தனி எழுத்துக்களாகப் பகுத்துவிடின், பொருள் தராது.

தமிழில் அயலொலி கலத்தல் கூடாதென்பதை யுணர்த் தவே,

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே." (எச். 5)

என்று தொல்காப்பியரும்,

"இடையில் நான்கும் ஈற்றி லிரண்டும்
அல்லா அச்சை வருக்க முதலீ(று)
யவ்வாதி நான்மை ளவ்வாகும் ஐயைம்
பொதுவெழுத் தொழிந்த நாலேழுந் திரியும்."
(நன். பத. 19)

என்று பவணந்தியாரும், கூறிப் போந்தனர்.

ஆகவே, சொற்றூய்மை போன்றே ஒலித்தூய்மையும் தமிழுக்கு இன்றியமையாத பண்பாம்.

தமிழைக் குமரி நாட்டிலேயே செந்தமிழ் கொடுந்தமிழ் எனப் பகுத்து, செந்தமிழையே பேணிவந்தனர். கொடுந் தமிழ் நாடுகளில் வழங்கிய சிறப்புச் சொற்களை மட்டும் திசைச் சொற்கள் (Provincial words) என்று ஏற்றுக்கொண்டனர்.

"இயற்சொற் றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்குஞ் சொல்லே."
(தொல். எச். 2)

"செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி." (ஷை ஷை 4)

அக் காலத்துக் கொடுந்தமிழ் நாடுகள் வேறு; தொல் காப்பிய வுரையாசிரியர் கூறும் கொடுந்தமிழ் நாடுகள் வேறு.

வெளிநாடுகளினின்று வந்த பொருள்களெல்லாம் செந் தமிழ்ப் பெயர் பெற்றன. உருளைக்கிழங்கு, ஏழிலைக்கிழங்கு, சருப்பு, சாத்துக்குடி, செந்தாழை (அன்னாசி), புகையிலை, மிளகாய் முதலிய நிலைத்திணைப் பொருள்களும், ஒட்டகம், ஒட்டகச்சிவிங்கி, கழுதை, கோவேறு கழுதை (அத்திரி), குதிரை, வரிக்குதிரை, நீர்யானை முதலிய விலங்குகளும்; தீக் கோழி, வான்கோழி முதலிய பறவைகளும்; மிதிவண்டி, புகை வண்டி, சூழ்ச்சிய வண்டி முதலிய ஊர்திகளும்; குண்டுக்குழாய், வைத்தூற்றி, மண்ணெண்ணெய் முதலிய பல்வகைப் பொருள் களும், வெளிநாடுகளினின்று வந்தவையே.

குதிரை ஒன்றே டன்னிரு வகையாக வகுக்கப்பட்டு வெவ் வேறு பெயர் பெற்றுள்ளது. குச்சுக்கிழங்கு இடந்தொறும் பெயர் வேறுபட்டுப் பன்னிரு சொற்களாற் குறிக்கப்படுகின்றன. ஆதலால், வெளிநாட்டுப் பொருள்கட்கெல்லாம் வெளிநாட்டுப் பெயர்களே யிருத்தல் கூடுமென்பது' பொருளற்ற உறழாட்டே.

பிறமொழிகளெல்லாம், தமிழ்போல் சொல்வளமும் சொல் லாக்க வாய்ப்பும் தூய்மை மரபும் உடையனவல்ல. ஆங்கிலர் கடந்த முந்நூற்றாண்டுகளாகப் புதுப்புனைவுகளால் தம் அறி வைப் பெருக்கிக் கொண்டனர். தம் புத்தறிவுக் கருத்துக்களைக் குறிக்கத் தம் மொழியிற் சொல்லின்மையால், இலத்தீன் கிரேக்க மொழிகளினின்று ஏராளமாய்க் கடன்கொண்டு தம் கருத்திற்கேற்பத் திரித்துக் கொண்டனர்.

எ - டு:

| புதுக்கருத்து | கடன்சொல் | திரிப்பு |
|---|---|---|
| சூழச்சியப்பொறி | L. ingenium (சூழ்ச்சி) | engine |
| மின் | Gk. electron (அம்பர்) | electricity |

இங்ஙனம் ஆங்கிலர் தம் கருத்தை யுணர்த்தப் பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்தியது, பங்கீட்டுக் காலத்தில் மிகுதியாய் அரிசி கிடைக்குமிடத்திற் பையையும், உழவன் தான் விளைத்த கூலத்தைச் சந்தைக்குக் கொண்டுபோக வண்டியையும், இரவல் பெற்ற தொக்கும்.

ஆங்கிலத்தில் மட்டுமன்றி இலத்தீன் கிரேக்க மொழிகளிலும் பல அடிப்படைச் சொற்கள் தமிழாயிருப்பதால், இற்றை ஆங்கில அறிவியற் கம்மியக் கலைக் குறியீடுகளிற் பல தமிழ்ச் சொற்களையே அடிப்படையாகக் கொண்டும் உள்ளன. மேலும், ஆங்கிலக் கலைக்குறியீடுகளெல்லாம் பல்வேறு வகையில் மிக எளிய முறையில் அமைந்துள்ளன. அம் முறைகளைக் கையாளின், எல்லாக் கலைக்குறியீடுகளையும் தமிழிற் செவ்வையாக மொழிபெயர்த்துக் கொள்ளலாம். என் புதிய வெளியீடான "மண்ணில் விண் அல்லது வள்ளுவர் கூட்டுடமை" என்னும் பொத்தக முடிவுரையில் இவ் வுண்மைகளெல்லாம் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. ஆண்டுக் கண்டு தெளிக.

தமிழ்நாட்டரசு சட்டத்துறை தவிர வேறெதிலும் குறியீடுகளை மொழிபெயர்க்க இதுவரை எத்தகை முயற்சியும் செய்யவில்லை. காலஞ்சென்ற இ. மு. சுப்பிரமணியப் பிள்ளை போன்ற தனிப்பட்ட தமிழ்ப் புலவரும், கிண்டி, கோவை, காரைக்குடி அண்ணாமலைநகர் முதலிய இடங்களிலுள்ள கல்லூரி மாணவருமே, தம் அளவிறந்த தமிழ்ப் பற்றினால். ஆட்சிச் சொற்களையும் பல்வேறு அறிவியற் குறியீடுகளையும் தொகுத்தும் மொழிபெயர்த்தும் உள்ளனர். அரசு அவற்றையெல்லாம் தொகுத்து அளவைப்படுத்தி, ஆட்சிச் சொற்களைப் போன்றே பிறவற்றையும் ஆட்சிக்குக் கொண்டுவருதல் வேண்டும். இதற்காகத் தக்காரைக் கொண்ட ஒரு நிலையான குழுவையும் அரசு அமர்த்துதல் வேண்டும்.

மூவேந்தரும் ஆரியக் கொள்கைகளைத் தழுவியபின் தனித்தமிழ்க் காவலரான புலவர் மரபு அற்றுப்போனதினால், 10 ஆம் நூற்றாண்டிலிருந்து வடசொற்கள் தமிழில் வரைதுறையின்றிப் புகுந்து தமிழ்ச் சொற்களை வழக்கு வீழ்த்தவும் தமிழைக் கலவை மொழியாக்கவும், தொடங்கின. வடமொழி வெறியரான மாலியப் (வைணவப்) பிராமணர், நாலாயிரத் தெய்வப் பனுவல்களின் உரைகளையும் மாலியக் கோட்பாடுகளையும், வடசொல்லுந் தென்சொல்லுங் கலந்த மணிப்பவள நடையிலேயே வரைந்து வந்தனர். அது தமிழில் விளக்க முடியாத மாலிய மருமங்களை (இரகசியங்களை) அறிய விரும்பிய அறிஞர்க்குமட்டும் வரையப்பட்டதன்று. தமிழ்நாட்டு மாலியர் சிறுபான்மையராதலால், அது தமிழைப் பெரிதுந் தாக்கவில்லை. ஆயினும், 11 ஆம் நூற்றாண்டில் எழுந்த வீரசோழியம் என்னும் புத்தமித்திரன் புன்னூல்,

"இடையே வடவெழுத் தெய்தின் விரவியல் ஈண்டெதுகை
நடையேது மில்லா மணிப்பிர வாளநற் றெய்வச்சொல்லின்
இடையே முடியும் பதமுடைத்தாம்.............."
(வீர. அலங். 40)

என்று நுவலுமளவு தமிழ் தாக்குண்ணவே பட்டது.

"கி.பி. 9ஆம் நூற்றுண்டிற்குப் பிறகு மித மிஞ்சிய வட மொழிக் கலப்பால் கேரள இலக்கியத்தின் ஒரு பகுதி மணிப் பிரவாள நடையில் எழுதப்பட்டது. பண்டைய வட்டெழுத்தின் இடத்தில் ஆரிய எழுத்து இடம் பெற்றது. கி.பி. 12ஆம் நூற்றுண்டளவில் மணிப்பிரவாள இலக்கியங்கள் தோன்றின. வைசிக தந்திரம், உண்ணுநீலிசந்தேசம், உண்ணிச்சிரிதேவி சரிதம் உண்ணியச்சி சரிதம், அனந்தபுர வர்ண்ணனம், ஆகிய நூற்கள் லீலா திலகத்திற்கு முன்னர்த் தோன்றிய முக்கியமான மணிப்பிரவாள இலக்கியங்கள். இவற்றை அடிப் படையாக அமைத்து வடமொழியில் எழுதப்பட்டதே, கி.பி. 14ஆம் நூற்றுண்டில் எழுந்த லீலாதிலகம் என்ற மணிப்பிரவாள இலக்கணம்." (தமிழ் லீலாதிலகம், முன்னுரை, பக். 6 - 7).

இன்று இரண்டொருவர் அல்லது ஒருசிலர் விரும்பும் மணிப்பவளமோ, லீலாதிலகம் போலாது, வடமொழியும் ஆங்கி லமும் அவற்றின் சிறப்பெழுத்தொடு தமிழிற் கலக்கும் இருமடி மணிப்பவளம் அல்லது மும்மணிக்கலவை.

சேர வேந்தர் குடி அற்றபின், மலையாள நாட்டில் தலைமை யாக விருக்கும் நாயர் வகுப்பைச் சேர்ந்த மன்னரும் மக்களும் ஆரியத்திற்கு முற்றும் அடிமைப்பட்டுப் போனதினால், சேர நாட்டுச் செந்தமிழ் முன்பு கொடுந்தமிழாக மாறிப் பின்பு தெலுங்கு கன்னடம் முதலிய திரவிட மொழிகளினுங் கேடாகச் சிதைந்து, மணிப்பவள மொழியாக வழங்கி வருகின்றது.

இனி, தமிழ் மும்மொழிக் கலவையாயின், எந்நிலை யடை யுமோ, இறைவனுக்குத்தான் வெளிச்சம்.

மாந்தன் பேசக் கற்றதிலிருந்து தொடர்ந்து படிப்படியாக முழு வளர்ச்சியடைந்து கடந்த ஐம்பதினுயிரம் ஆண்டுகளாக வழங்கிவரும் ஒப்புயர்வற்ற தன்னந்தனித் தூய தமிழை, மறைமலையடிகள் போன்ற நிறை புலவர்க்கும் மாற்றவும் சிதைக் கவும் அதிகாரமில்லை. அங்ஙனமிருக்க, தமிழ்ப் புலமையும்

தமிழாராய்ச்சியும் தமிழ்ப் பற்றுமில்லாத ஒருசிலர் தமிழை உருத் தெரியாது மாற்ற உரிமையுடையரோ?

20-5-1978 அன்று, "திருச்சித் தொழிற் நுட்பக் கல்லூரி முதல்வர் திரு. நா. ஞானசம்பந்தம் அவர்கள், தமிழில் உள்ள சொற்கள் அனைத்துக்கும் வேர் இருக்கின்றது என்று கண்டு பிடித்திருப்பதாக, நான்கு நாட்கட்குமுன் வந்தவர்கள் சொன் னார்கள். ஒரு பக்கம் அறிஞர் சிலர் இவ் வகையில் ஆராய்ந்து வரும்போது, கொச்சைத்தமிழ் நடையும் மணிப்பிரவாள நடையும் மறைமலையடிகள் கொள்கைக்கு மாறாகப் பெருகி வருவது வருந்துதற்குரியது. புலவர்கள், பேராசிரியர்கள் கவனிக் கின்றார்களில்லை'' என்று வருந்தி எனக்கெழுதிய தாமரைச் செல்வர், திடுமென்று மனந்தடுமாறி, "ஆழ்ந்து எண்ணிப் பார்ப்போமானால், பல்துறை அறிவியல் அறிவையுந் தமிழில் கொடுப்பதற்கு, நாமும் பிற மொழியினரைப்போல அறிவியல் கலைச்சொற்களை அப்படியே எடுத்துக்கொண்டு, தமிழியல்புகட் கேற்ப அமைத்து அறிவியல் நூல்களை ஆக்கிக் கொள்வதே தக்க வழியாகும்,'' "கலைச்சொற்களை மட்டும் எடுத்துக்கொண்டு தனித்தமிழில் நூல்கள் ஆக்கவேண்டுமே யல்லாது, வழக்கத் திலுள்ள பொதுவான தமிழ்ச் சொற்களையும் கைவிட்டுப் பிற மொழிச் சொற்களைக் கூட்டியும் கொச்சைச் சொற்களைப் புகுத்தியும்' இலக்கணப் பிழையுறவும் எழுதுதல் கூடாது.'' என்று மேழச் 'செல்வி' ஆசிரியவுரை வரைந்திருப்பது, ஒரு கன்னி சிலரொடு மட்டும் சிலமணிநேரம் கூடி விளையாடிவிட்டு, ஏனைப்பொழுதெல்லாம் தன் கற்பைக் கண்டிப்பாய்க் காத்துக் கொள்ள வேண்டும் என்று சொல்வது போலிருக்கின்றது.

இனி, ஆடவைச் 'செல்வி' யிதழில், புதிய முத்தமிழ்க் கட்டுரையின் கீழ், "இக் கட்டுரையில், ஆசிரியர் வடமொழி எழுத்துக்களை அறிவியல் சொற்களைத் தமிழில் எழுதுவதற்கு மட்டுமே பயன்படுத்த வேண்டுமென்று, அறுதியிட்டுக் கூறு வதை நோக்குக. இலக்கிய நடைக்கு இவ்வெழுத்துக்களைப் பயன்படுத்தக் கூடாது என்று, கண்டிப்பாகக் கூறுவதை வரவேற்காலம்'' என்று தாமரைச் செல்வர் குறிப்பு வரைந் திருப்பது, இந்தியை ஆட்சிக்கும் எழுத்துப் போக்குவரத்திற்குந் தான் பயன்படுத்தவேண்டும்; இலக்கியத்திற்குப் பயன்படுத்தக் கூடாது, என்று சொல்வதுபோன்றே யிருக்கின்றது.

பாடப் பொத்தகங்களும் ஒருவகை இலக்கியமே என்பதை அவரறியாதது வருந்தத் தக்கது. இன்று பாடப் பொத்தகத்

திற்கு நேர்வதே நாளை இலக்கியத்திற்கும் நேரும். அதன்பின் இடைக்கால நிகண்டுகள்போல, அகர முதலிகளும் அயன் மொழிச்சொற்களை யெல்லாம் அவற்றின் சிறப்பெழுத்துக் களுடன்,

"நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலக மாதலின்
இருதிணை ஐம்பால் இயல்நெறி வழாஅமைத்
திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும்"

என்று கி.மு. 6ஆம் (அல்லது 7-ஆம்) நூற்றாண்டிலேயே, தொல்காப்பியம் (மர. 90) ஓம்படை கூறியிருத்தல் காண்க.

இன்னும் மூவாண்டுள், 'செந்தமிழ்ச் சொற் பிறப்பியல் நெறிமுறைகள்' என்னும் நூல் உருவாகும். அதன்பின், அதைப் பின்பற்றி, எப் புதுச் சொல்லும் புனைந்து கொள்ள லாம்; எக் கலைக் குறியீட்டையும் மொழிபெயர்க்கலாம். அது வரை பொறுமையாயிருத்தல் வேண்டும்.

ஆட்பெயர், இடப்பெயர் முதலிய மொழிபெயர்க்கக் கூடாத சிறப்புச் சொற்களையும், தமிழெழுத்திலேயே எழுதல் வேண்டும். எ-டு. சேக்கசுப்பியர், ஆப்பிரிக்கா. பிற சொற்களையெல்லாம் மொழி பெயர்த்தே யாதல்வேண்டும்.

இனி, 'புதிய முத்தமிழ்' வகுத்த புதிய புணர்ச்சி நெறிப் படி,

1. நிலைமொழி யீற்றில் நிற்பது மெய்யேல்
வருமொழி ரலமுன் வாரா வென்க
கலைமான் இரண்டு கண்டே னிலக்கில்
எனவுரைத் தெழுதுக இதுமுது நெறியே.

2. நிலைமொழி யீற்றில் உயிரொலி நிற்பின்
வருமொழி ரலமுன் வரலா மென்க
கலைமா ரெண்டு காணுக லெக்கில்
எனவுரைத் தெழுதுக இதுபுது நெறியே.

என்று புணர்ச்சி யிலக்கணத்தை மாற்றவும் நேரும். இதன் தீங்கை அறிஞர் கண்டுகொள்க.

ஒருவர் ஏதேனும் உயர்பதவி பெறின், தாம் தேர்ச்சி பெற்ற துறையிலேயே சிறப்புப் பணி செய்தல் வேண்டும்; தம் அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்தி அடாததில் தலையிடக் கூடாது.

தமிழ்நாடு இன்னும் விடுதலை பெறவில்லை. தமிழ்நாட்டு உண்மையான வரலாறும் இன்னும் எழுதப்படவில்லை. எதிர் காலத்தில் ஒரு தமிழ்க் கமால் பாசா தோன்றி எர்க்குலிசு திறவகையில், தமிழரின் மூவாயிர வாண்டடிமைத்தன விளைவையும் ஒருங்கே அகற்றி விடலாம். ஆதலால், வரம்புக்கடந்த நடத்தையை விட்டொழிக.

இன்றே, முடிவுகொள்ள வேண்டுமெனின், உரைவேந்தர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, பெரும்புலவர் வேணுகோபாலப் பிள்ளை, அருட்டிரு அழகரடிகள், தவத்திருக் குன்றக்குடி அடிகள் முதலிய பேரறிஞரைக் கூட்டிப் பெரும்பான்மைத் தீர்ப்பை ஏற்றுக் கொள்க.

"ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்"

"கண்ணு தற்பெருங் கடவுளும் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணி டைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ."

———

## இதழாசிரியர் குறிப்பு

'தமிழில் பலதுறை அறிவியல் நூல்களை ஆக்கும் முறை' என்ற 'செல்வி' (சித்திரை 78) இதழில் வெளிவந்த தலைப்புக் கட்டுரையையும் 'புதிய முத்தமிழ்' என்ற செல்வி (ஆனி, 78) இதழில் வெளிவந்த கட்டுரையையும் கண்ணுற்ற மொழி ஞாயிறு பாவாணர் அவர்கள் எழுதிய கட்டுரை மேலே தரப் பெற்றுள்ளது.

கல்லூரி, பல்கலைக்கழகங்களில் கலைத் தொடர்பான பட்டப்படிப்புக்கு மட்டுமல்லாது அறிவியல், பொறியியல், மருத்துவம் போன்ற துறைகளின் மேல்நிலைப் படிப்புக்கும் தமிழ் பாடமொழியாக விரைவில் வரவேண்டுமென்ற நோக்கத்துடன் தான் முற்கூறிய இரு கட்டுரைகளும் எழுதப்பெற்றன. அவ்வாறு பாடமொழியாதற்குக் கலைச்சொல்லாக்கம் ஒரு தடையாக இருக்கக் கூடாது என்பதே நம் நோக்கம்.

முற்கூறிய தலைப்புக் கட்டுரையில் தமிழில் கலைச்சொற்களை ஆக்குவதற்கு 'அரசோ பல்கலைக் கழகங்களோ போதுமான அளவுக்கு அக்கறையோ முயற்சியோ எடுத்துக்கொள்ளவில்லை'

என்று குறிப்பிட்டுள்ளோம். அதே கருத்தைத்தான் பாவாணர் அவர்கள் இக்கட்டுரையில் 'தமிழ் நாட்டரசசட்டத்துறை தவிர வேறெதிலும் குறியீடுகளை மொழிபெயர்க்க இதுவரை எத்தகைய முயற்சியும் செய்யவில்லை' என்று குறிப்பிட்டுள்ளார்.

மேலும் கலைச்சொற்களை ஆக்கும்போது முதற்கண் அவற்றை எடுத்துத் தமிழியல்புகட்கேற்ப அமைத்துக்கொள்ள வேண்டுமென்று குறிப்பிட்டுள்ளோமே தவிர, தமிழ் இலக்கண நெறி முறைக்கு மாருகச் செல்லவேண்டுமென்று அதில் பொருளில்லை. அதுவும் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குத்தான் என்பதில் ஐயமில்லை. பாவாணர் போன்ற பேரறிஞர்களின் துணை கொண்டு அக் கலைச் சொற்களுக்குரிய தமிழ்ச் சொற்களை ஆக்கும் வரைதான் என்பதிலும் ஐயமில்லை. புதிய கலைச்சொற்களை ஆக்கியபின் முன்னவற்றைக் கைவிட்டு விடுவதில் தவறில்லை. மேனுட்டுக் கலைச்சொற்களை அப்படியே ஏற்றுக் கொண்டு வழிவழியாகக் 'கொத்தடிமை'களாகத் தமிழர்கள் வாழ வேண்டுமென்று தெளிவான சிந்தனையுடைய யாரும் எண்ண மாட்டார்கள்.

'புதிய முத்தமிழ்' என்ற கட்டுரையைப் பற்றியும் பாவாணர் குறிப்பிட்டுப் பிறமொழிகளிலுள்ள சில எழுத்துக்களைத் தமிழில் இல்லாமையால் ஏற்றுக்கொள்ளலாம் என்று கூறுதல் தவறு. எல்லா மொழிகளிலும் எல்லா ஒலிகளுக்குரிய எழுத்துக்கள் இருத்தல் இயலாது என்று குறிப்பிட்டுள்ளார்.

சில கலைச்சொற்களை ஒலித்தற்குத் தேவையான வரி வடிவங்கள் தமிழில் இல்லாததால் அதற்கேற்ற வரிவடிவங்களை உண்டாக்க வேண்டுமென்பதுதான் அக் கட்டுரையாசிரியரின் நோக்கம். வடமொழி எழுத்துக்களை அந் நோக்குடன்தான் எடுத்தாளலாமென்று குறிப்பிடுகிருர். இல்லையேல் அதற்கு மாற்ருக 'இப்போது இருக்கிற எழுத்துக்களுக்கு அடையாளக் குறிகளை இடுவதன் மூலம் தேவையான புதிய ஒலி வடிவங்களைத் தமிழில் புகுத்திக் கொள்ளலாம்' என்பதையும் அக் கட்டுரையாசிரியரே அதில் குறிப்பிட்டுள்ளார்.

தமிழில் உயர் அறிவியல் படிப்பு விரைவில் வரவேண்டுமென்பதே நம் அனைவரது விருப்பமாகும். எனினும் பாவாணர் அவர்கள் சொல்லாக்கத் துறையில் கற்றுத் துறைபோயவர். அவர் கூற்றுப்படி அவர்தம் 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் நெறிமுறைகள்' என்னும் நூல் மூவாண்டுக்குள் வர விருப்பதை வரவேற்று அதுவரை பொறுமையாயிருத்தலில் தவறேதுமில்லை யென்று எண்ணுகிருேம்.

—ஆசிரியர்.

# சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள்

[பி. எல். சாமி, ஐ.ஏ.எஸ்.]

(பரல் ௧௦, பக்கம் ௪௮௫இன் தொடர்ச்சி)

படாஅம் என்றது பட்டு, பருத்தி முதலிய துணிகளில் ஓவியம் வரைந்த ஆடைகளைக் குறித்திருக்கலாம். நன்னூல் 289ம் சூத்திரத்துக்குக் கூறிய உரையில் மயிலைநாதர் இப்படாஅம் குழிப்பாடி, இப்பட்டுச் சீனமெனக் கூறியதைக் காணலாம். குழிப்பாடி என்ற ஊரில் ஓவியம் வரைந்த பட்டாடைகள் சிறப்பாக நெய்யப்பட்டன என்று தெரிகின்றது. பட்டின் பிறப்பிடம் சீனநாடு என்பது தெரிந்ததாகும். இடைக் காலத்திலும் சீனப்பட்டு தமிழகத்திற்கு வந்தது தெரிகின்றது. மோட்டிச்சந்திரா (Motichandra) என்ற அறிஞர் 'போடரா' (Potara) என்பது பட்டில் நெய்யப்பட்ட புடைவை என்று கூறியுள்ளார். இந்தச் சேலையைக் கி.பி. முதல், இரண்டு நூற்றாண்டுகளில் 'விசித்திர படோலிகா' என்று அழைத்ததை இலளித வித்தாரம் என்ற நூல் குறிப்பிட்டுள்ளது. அடியார்க்கு நல்லார் 'சித்திர படாம்' என்ற ஆடையைக் குறிப்பிட்டுள்ளார். 'விசித்திர படோலிகா' என்ற ஆடை சித்திரம் வரையப்பட்ட மாறுபாடான ஒருவகை ஆடையென்று தெரிகின்றது. படோலிகா (பட்டோலை) என்பது படாம் என்ற ஆடை போன்றது எனக் கருதலாம். படம் என்பது தைத்த ஆடையைக் குறிக்கும். ஆனால், படாம் என்பது தைக்காத ஆடையாகவும் ஓவியம் வரையப்படாத ஆடையாகவும் இருக்கலாம்.

சிலவகை தனித்த சிறப்புற்ற ஆடைப் பெயர்களும் காணப்படுகின்றன. பரிபாடலில் 'புட்டகம்' (12) என்று கூறப்பட்ட ஆடையே பிற்காலத்தில் 'புட்டா' என்று அழைக்கப்பட்டதாகத் தெரிகின்றது. கோலம் என்பது இக்காலத்தில் மகளிர் வரையும் வரிச்சித்திரத்தைக் குறிக்கும். இதுபோன்று வரிகள் வரைந்து அமைத்த எழுதுவரிக் கோல ஆடைகளைக் கோலன் என்று குறித்திருக்கலாம். 'படபடகத்தொடு பலிகலந் துலவிய கடை கடை பலிதிரி கபாலி' என்று சுந்தரர் (72-9) பாடியுள்ளார். இந்த மேலாடை தைத்த ஆடையாகவும் இருந்திருக்கலாம். 'வடகமும் துகிலும் தோடும்' என்று சிந்தாமணி (462) கூறுவது கவனிக்கத்தக்கதாகும். படவடகம் என்பது எழுதுவரிக்கோலம் (outline) தீட்டப்பட்ட ஆடையாக இருந்திருக்கலாம். கோ

ளாவில் இன்று கதக்களி முதலிய ஆட்டங்கள் ஆடுபவர்கள் வரிக்கோலத்தையே முகத்திலும் உடலிலும் தீட்டி ஆடுகின்றனர். இந்தக் கதக்களி ஆட்டத்திற்கு மிகமிக முந்திய பண்டைக்கால ஆட்டம் கேரளத்தில் இன்று கிராம மக்களால் ஆடப்படும் தரையாட்டங்கள் (திரையாட்டங்கள்) ஆகும். இந்த ஆட்டம் பண்டைப் பழங்குடியரான வேலன்மார், பெருவண்ணான் என்ற சாதியினர் ஆடியதாகும். இதைப் பேயாட்டம் (Devil Dance) என்று பிற்காலத்தில் அழைத்தனர். வடமலையாளத்தில் இன்றும் இந்த ஆட்டங்களை எழுதுவரிக் கோலத்தோடு ஆடுகின்றனர். முகத்திலும் மார்பிலும் கைகளிலும் இந்த எழுதுவரிக்கோலம் வரைந்து ஆடுவதே வழக்கமாகும். இவ்வாறு எழுதுவரிக்கோலத்தை வரைந்து ஆடும் ஆட்டம் சிறப்பாக வழங்கிய நாட்டைக் கோலத்து நாடு என்றும் அதையே வடமொழியில் 'கோலஸ்திரி' நாடு என்றும் மாற்றி வழங்கினர்.

திருக்கோல நாடு என்பதையே கோலஸ்திரி நாடு என்றனர். கி.பி. 13ஆம் நூற்றாண்டுவரை இந்த நாட்டை ஆண்ட மன்னர்கள் 'கோலஸ்திரி ராஜாக்கள்' என்று கல்வெட்டுகளிலும் மலையாள நூல்களிலும் அழைக்கப்பட்டனர். சிலப்பதிகாரத்தில் கோலன் (28-73) என்ற சொல்லிற்கு ஒரு வகை ஆடை என்றும் கோலம் அணிந்தவன் என்றும் பொருள் கூறுவர். கோலன் என்ற சொல் ஆடையைக் குறித்தால் அது ஆட்டக்காரர்கள் அணிந்த ஆடையைக் கூறுவதாகக் கருதலாம். சிலம்பில் கூறப்பட்ட வரிகோலத்தையும் கோலன் என்ற ஆடையையும் பயன்படுத்தியே கதக்களி என்ற ஆட்டம் தோன்றியது. இது திடீரென்று யாரோ கண்டுபிடித்து ஆடிய ஆட்டம் என்று மலையாள அறிஞர்கள் கூறுவது அறியாமையாலாகும். கதக்களி, ஒட்டம் துள்ளல் ஆகிய சிறப்புற்ற கேரள ஆட்டங்களுக்கு எல்லாம் சிலப்பதிகாரத்திலும், தமிழிலக்கியத்திலும் அடிப்படையான தொன்மைச் சான்றுகள் உள்ளன. துள்ளல் என்ற ஆட்டம் பாட்டியல் முறையில் துள்ளல் ஓசை உடையது. ஒட்டம் துள்ளல் ஒடித்துள்ளல் ஓசையுடன் ஆடிய ஆட்டமாகும். கதக்களி என்பது சினத்துடன் ஆடும் ஆட்டமாகும். மலையாளத்தில் களி என்ற சொல் பொதுவாக விளையாட்டைக் குறிக்கும்.

இலக்கியத்தில் புதிய ஆடை வகைகள் கூறப்பட்டதுபோல இலக்கணத்திலும் அரிதாகச் சில ஆடைகள் கூறப்பட்டுள்ளன. தொல்காப்பியச் சொல்லதிகார உரையில் தெய்வச்சிலையார் கொல்லவன் பட்டு உளவோ என்றால் கோசிகம் அல்லது இல்லை

என்று காட்டியுள்ளார். தெய்வச்சிலையார் காலத்தில் கொல்லம் என்ற கேரள துறைமுகம் சிறந்த துறைமுகமாக விளங்கியது. ஆதலின் அங்கு இறக்குமதியான சீனநாட்டுப்பட்டையே 'கொல்லவன்பட்டு' என்றழைத்தனர். கொல்லத்தில் பிற் காலத்தில் இறக்குமதியான முந்திரிக்கொட்டையை 'கொல்லம் அண்டி' என்றும் மிளகாயைக் 'கொல்லம் மிளகு' என்றும் கூறியதைக் கவனிக்கவேண்டும். கோசிகம் என்பது காசிப்பட்டைக் குறித்தது ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது.

கல்லாடர் என்ற உரையாசிரியர் "ஊசியொடு குயின்ற தூசும் பட்டுமென்பது காரகக் கருவி" என்று கூறியுள்ளார். இதிலிருந்து பருத்தி, பட்டாடைகளில் ஊசியால் வினைத் தொழில் செய்யப்பட்ட ஆடைகள் (Embroidered cloth) இருந் தன என்பது தெளிவாகின்றது. தெய்வச்சிலையார் ஆகு பெயர்க்கு இலக்கணம் நுதலிற்று என்று கூறும்போது 'இடத்து நிகழ் பொருளை இடத்தாற் கூறுதல்' என்று சொல்லி 'வேளா காணி என்பது வேளாகாணியிற் பிறந்த ஆடையை அப் பெய ரால் வழங்குதலில் ஆகுபெயராயிற்று' என்று கூறினர். வேளா காணி என்ற ஊரில் நெய்யப்பட்ட ஆடை சிறப்பான ஆடை யாக இருந்ததாகத் தெரிகின்றது. வேளாங்கண்ணி என்று இன்று வழங்கப்படும் ஊரே வேளாகாணி என்று தெய்வச் சிலையார் காலத்தில் வழங்கப்பட்டதாகத் தெரிகின்றது. கன்னி மாதா தோன்றி காட்சிகொடுத்த இடமாக கத்தோலிக்க மதத் தினர் பிற்காலத்தில் போற்றியதால் வேளாங்கன்னி என்று பெயர் மாறியதாகத் தெரிகின்றது.

வேளாகாணி என்பது வேள் என்ற முருகனுக்குக் கொடுக்கப் பட்ட காணி நிலமாக இருக்கலாம். ஆனால், இக்காலத்தில் மாதாக்கோயிற் சிறப்பினால் பெயர்மாறிவிட்டது. ஆயினும் இந்த மாதாக்கோயில் எல்லா மதத்தினரும் வழிபடும் கோயி லாகவும் இந்து சமய வழிபாட்டு முறைகளைப் பின்பற்றிவரும் கோயிலாகவும் இருப்பது கவனிக்கத்தக்கது. கல்வெட்டுகளி லும் சில ஆடைகள் கூறப்பட்டுள்ளன. 'பரிபாத மூலப்பட்டுடை பஞ்சாச்சாரியார்' (S. I. I. Volume III—Part II) சிலவகைப் பட்டாடைகள் கோயில்களில் குருக்களுக்கு மட்டும் பயன் படுத்தப்பட்டமையைக் காணலாம். கல்வெட்டுகளில் 'கொன்கப் பட்டு' முதலிய ஆடைகளின் பெயர்கள் கூறப்பட்டுள்ளன. பட்டில் பலவகைகள் வழங்கின என்பது தெரிகின்றது.

ஆடைகளை நெய்வதொடு எப்படி ஆடைகளை விற்பதற் காகச் சிறப்புற, நேர்த்தியுறச் செய்தனர் என்பதும் சங்க நூல்

களிலிருந்தும் பிற்கால நூல்களிலிருந்தும் தெரிந்து கொள்ளலாம். அழுக்கற்ற ஆடையை உடுத்துவதே இயல்பானது என்று சங்க காலத்தில் கருதினர். அழுக்கடைந்த ஆடையை 'உணி' என்றனர். அழுக்கை உண்ட ஆடை என்ற பொருளில் ஆசாரக்கோவையில் (12) இப் பெயர் வருகின்றது. மலைப்பாம்பு ஒரு தடவை ஒரு விலங்கைத் தின்றால் "ஐம்பது, அறுபது நாட்கள் உணவின்றித் தனது உடலின் கழிவுப் பொருளில் கிடப்பதால் 'மாசுணம்' என்று அழைக்கப்பட்டது. மாசுபட்ட ஆடையை நற்றிணையும் குறிப்பிட்டுள்ளது.

"நெய்யும் குய்யும் ஆடி மையொடு
மாசுபட் டன்றே கலிங்கமும் தோளும்" —நற்றிணை 380

என்று கூறப்பட்டிருப்பதால் உணி என்ற பெயரின் பொருளும் மாசுணம் என்ற பெயரின் பொருளும் புரிந்துகொள்ளக்கூடியதாகும். ஆடைகளை விற்பவர் நன்கு மடித்து நேர்த்தியாக விற்பதும் ஆடைகளுக்கு நறுமணம் ஊட்டி விற்பதும் கூறப்பட்டுள்ளது. ஆடைகளை எவ்வளவு நேர்த்தியாக வெளுத்துக் கஞ்சி விட்டு, சலவை செய்தனர் என்பதும் சங்க நூல்களில் கூறப்பட்டுள்ளது. சலவை என்ற சொல்லும் ஜவுளி என்ற சொல்லும் 12ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர், தமிழில் தோன்றியவையாகும். குஜராத்தியர் இலக்கியத்தில் பிற்காலச் சாளுக்கியர் காலத்திலிருந்தும் 'சால்வி' (Salvi) என்ற நெய்யும்தொழிலைப் பின்பற்றிய சாதியாரைப்பற்றி அறிகிறோம். குற்றாலக்குறவஞ்சி என்ற மிகப் பிற்கால நூலில்தான் சலவை என்ற சொல்லை வெள்ளாடை என்ற பொருளில் குறிப்பிடுவது கவனிக்கத் தக்கது. சங்க காலத்திலேயே காழியர் என்ற வண்ணார் உவர் மண்ணை எடுத்துச் சலவைக்குப் பயன்படுத்தியது கூறப்பட்டுள்ளது.

"..................................காழியர்
கவ்வைப் பரப்பின் வெவ்வுவர்ப் பொழியக்
களரி பரந்த கல்நெடு மருங்கின்"

என்று அகநானூறு (89) கூறியுள்ளது. சிலப்பதிகார காலத்தில் இதே காழியர் என்ற சொல் பிட்டுவணிகரின் பெயராக வழங்கப்பட்டது. பிற்காலத்தில் 'ஒலிவண்ணார் பறை' என்ற வரி விதிக்கப்பட்டு வந்ததைக் கல்வெட்டுகள் கூறுகின்றன. சங்க காலத்திலேயே எவ்வளவு நேர்த்தியாகத் துணிகள் சலவை செய்யப்பட்டன என்பது கூறப்பட்டுள்ளது.

(தொடரும்)

# இயற்கை ஓவியம்
# 'தவளைத் தாலாட்டு'

[புலவர் இரா. இளங்குமரன்]

ஒரு குளம்; அது மிகப் பெரியது; அதில் என்றும் நீர் வற்றுவது இல்லை; வற்று முன்னே மழையாலோ கால்வாய் நீராலோ பெருகிவிடும். அதனால், அக் குளத்தில் மீன்கள் பெருகிக் கிடக்கும்; பெருகிக் கிடப்பதும் அன்றிப் பெருத்துப் போயும் கிடக்கும்.

குளத்தின் நீர்வளத்துக்குத் தக்கவாறு அதன் அளவுமே பெரிது; கரை அகன்று உயர்ந்தது. வயற்பரப்பு விரிவானது. அங்கு வாழையும் கரும்பும் வளமாகத் திகழும். பசும்போர்வை போர்த்ததோ, பொற்படாம் பூண்டதோ என்ன நெற்பயிர் விளங்கும். இனிய மருததில அன்னையைப் 'பச்சைமா வயல் போல் மேனி' என்று பாடவும் தூண்டும்.

ஊரின் வடிகால் சேராத, தூயகுளத்தின் நீர் எப்படி இருக்கும்? ஆவின்பாலோ தேங்காய்ப் பாலோ எனத் தோன்றும். புது நீர் புகுந்தபொழுது என்றால் மிகச் சரியான வெண்மையாகவே இருக்கும். இந்தக் குளத்து நீரை எருமை பார்த்துவிட்டால் விட்டு வைக்குமா? 'காணும் இக் குளம் கயிலாயம்' எனப் படுத்துவிடும்.

எருமையை எழுப்பாமல் படுக்கவிட்டுவிட்டால் பகலென்ன? இரவுமே எழுந்திராது. ஆனால் அதனை ஆர அமரப் படுக்க விட்டால் தானே! படுக்கவிடாமல் தடுக்கிறானா எருமை மேய்க்கும் சிறுவன்? இல்லை! அவன் குளக்கரைமேல் இருக்கும் படர்ந்த ஆலமர நிழலில் 'கும்பகன்னப் படலம்' படித்துக் கொண்டிருக்கிறான். அவன் வந்து எருமையை எப்படி எழுப்பு வான்?

குளத்தில் எத்தனையோ வகை மீன்கள் திரிகின்றன; துள்ளி எழுகின்றன; கீழே விழுகின்றன; அவற்றால் எல்லாம் எருமைக்கு ஒரு துயரும் இல்லை. நன்றாய்ப் பருத்துப்போன வரால் மீன் 'சும்மா' இருப்பது இல்லை. நீரடி மட்டத்தில் உலாவித் திரிந்து, படுத்துள்ள எருமையை முட்டுகிறது; மோது கிறது; எருமையின் மடுவிலேயே 'முட்டுமுட்டு' என்று முட்டு

கிறது. ஈன்று சில நாள்களே ஆன எருமை—தொழுவத்தி லிருந்து ஓர் எட்டு வைக்கு முன்னே இரண்டு முறை திரும்பிப் பார்க்கும் எருமை—இந்த வரால் முட்டினைத் தன் கன்று முட்டுவது போலவே எண்ணிக் களிக்கிறது.

இழுக்க இழுக்கக் கைசுளுக்கிக் கடுக்க வைக்கும் கற்காம்பு எருமையானால் பால் சொட்டாது. இது 'வாங்கக் குடம் நிறைக்கும்' வள்ளல் எருமையாயிற்றே! பால் சொட்டச் சொட்டக் கொட்டாமல் இருக்குமா?

கன்றின் நினைப்பால் கரை ஏறியது எருமை; களித்துக் கொண்டு ஓடியது; வாய்க்கால் கரை உயரமானது; வாய்க்கால் ஆழமானது; பருத்த எருமை காலை நெருக்கி நெருக்கி வைத்த ஆர்வமிக்க ஓட்டத்தில் பால் பொழிந்தது; வீட்டுத் தொழுவில் நிற்கும் இளங்கன்றை நினைத்தன்றோ ஓடுகின்றது அது!

எருமை ஓடிச் செல்லும் வாய்க்காலிலே—வரப்பிலே—தாமரைக் கொடிகள் இருக்கின்றன. அவற்றில் பூக்கள் தலையெடுப்புடன் நிமிர்ந்து விரிந்துள்ளன. அப் பூவணைகளின் மேல் அன்னக்குஞ்சுகள் உள்ளன; அக் குஞ்சுகளின் தாய்மாரைக் காணவில்லை. மீன் போன்ற கண்களையுடைய மங்கையர் உலாவுவதுபோல் உலாவப் போய்விட்டனவா? அம் மங்கையர் நடையைப் பயின்று கொள்வதற்காக அவர்கள் வீடுகளைத் தேடியே போய்விட்டனவா? கலைவெறி வந்துவிட்டால் நிலைகொள்ள முடியாது போலும்!

தாயைப் பிரிந்துள்ள குஞ்சுகளுக்குத் தாங்கமாட்டாப் பசி. பாலன்றிப் பருகாப் பான்மையமைந்த அன்னக்குஞ்சு தன் பசிக்குத் தவளை நண்டு புழு பூச்சுகளை நாடுமா? கன்றை நினைந்து களித்தோடும் காரெருமை சொரிந்த பால், தாமரை இலை மேலும் பூமேலும் சொட்டியது. அது குஞ்சுக்கு 'இருக்குமிடம் தேடி வந்து இயற்கையன்னை எடுத்தூட்டிய இன்பத்துப் பால்' ஆயிற்று.

குஞ்சு பால் பருகியது; உடனே உறக்கம் அதன் விழிகளில் கொஞ்சியது; 'உண்டமயக்கம் தொண்டருக்கும் உண்டு' என்றால் அன்னக்குஞ்சு மட்டும் அதற்கு விலக்காகுமா?

எருமை மேய்ப்பவன் ஆலடியில் உருளலாம்; உறங்கலாம்; காலடியில் செருப்பில்லாமல் திரியலாம்! ஆனால் பிள்ளை யன்னத்திற்குத் தக்க பெருமையான படுக்கை வேண்டாவா! தாமரைப் பூவாம் மெத்தையில் படுத்தது குஞ்சு! பூவோ

மென்மை; அதனினும் மென்மை அன்னக்குஞ்சு. இவற்றுக்குப் பொருந்திய மெல்லிய பூங்காற்று மெத்தென வீசியது; கொடியோடு அசைந்தது தாமரைப் பூந்தொட்டில். அத் தொட்டிலில் கண்ணயர்ந்தது அன்னக் குஞ்சு!

பூந்தொட்டில் ஆகட்டும்; கொடியூஞ்சலும் ஆகட்டும் அசைந்தாடுதல் மட்டும் தாலாட்டாகுமா? தாலாட்டு என்னும் பெயருக்கே பொருந்தாதே! பாட்டு இல்லாத தாலாட்டு என்ன தாலாட்டு?

எருமை சேற்றிலும் நீரிலும் காலை அடித்து நீரை இறைத்து 'மார்மார்' எனக் கத்திக்கொண்டு ஓடியது அல்லவா! அதன் முழக்கத்தையும் ஒலியையும் நீர்த் துளியையும் பால் பொழிதலையும் அறிந்த தவளைக்கு இடிஇடித்து மழை பொழிவதாகத் தெரிந்தது. அதனால் தன் திருப்பாட்டைப் பாடியது! தன் அடியார் திருக்கூட்டத்துடன் 'பல்லியமே' இசைத்தது. அஃது அன்னக் குஞ்சுக்கு அருமைத் தாலாட்டு ஆகியது. இயற்கை வாரி வழங்கிய வளமைகள் இவை!

அறிவிலா மாந்தர் களிப்பு பலரை அல்லலுக்கு ஆளாக்கப் பார்க்கிறோம். ஆனால், குளத்து வராலின் களிப்பு படுத்திருக்கும் மாட்டைப் பால்பொழிய வைக்கிறது. கன்றை நினைந்தோடும் காராவின் களிப்பு, அதன் காலடியில் கிடக்கும் தாமரைக் கொடியை—இலையை—பூவை—அதில் புகுந்திருக்கும் அன்னக் குஞ்சை மிதிக்கவில்லை. மாறாகப் பசித்துக்கிடந்த குஞ்சுக்குப் பாலூட்டி ஈத்து உவக்கும் இன்பம் எய்துகிறது. தவளையைத் தாலாட்டுப் பாடவும் வைக்கிறது.

கலையின் பேரால் நாட்டில் எத்தனை எத்தனையோ கொடுமைகள்—கேடுகள்—நிகழ்கின்றன. ஆனால், அன்னத்தின் கலையார்வம் அதன் தாய்மைக்கும் பெண்மைக்கும் கேடாகிவிடவில்லை; குடும்ப வாழ்வைக் குலைத்துவிடவில்லை; தான் கொண்ட கலைக்கும் தலைக்குனிவு ஆக்கிவிடவில்லை. நாட்டின் புகழுக்கு இருப்பாகிப் பொலிவே சேர்க்கின்றது.

பயன்மிக்க நாட்டுப் பொருளாம் பால், பசித்தோர்க்குப் பயன்படாமல் பாழ்பட்டுப் போகவில்லை. அப்பாலும், 'அப்பால்' ஆகாமல், எப்பால் வேண்டுமோ அப்பால் கிடைக்க வகை செய்யப்படுகின்றது!

இம் மட்டோ! முன்னை நாளில், மேட்டுக் குடியினர் வாழ்வில் ஐவகைத் தாயர் அன்பு மழை பொழிந்து அணுக்கமாய்

அமைந்து பேணினர். ஒரு தாயின் உள்ளன்பைப் பெறவும் ஏங்கித் தவிக்கும் நாம் ஐவகைத் தாயர் அன்பு வாழ்வை நினைக்கவும் வியப்பாம். பெற்றெடுத்த நற்றாய், பேணிக்காக்கும் செவிலித்தாய், பாலூட்டும் ஊட்டுத்தாய், தாலிசைக்கும் ஆட்டுத்தாய், எடுத்தணைத்து ஏற்றனவெல்லாம் பயிற்றும் கைத் தாய்! இவ் வைவகைத் தாயரும் இந்த இயற்கை ஓவியத்தில் காட்சியளிக்கின்றனர். நற்றாய் அன்னம்; இயற்கை செவிலித் தாய்; எருமை ஊட்டுத்தாய்; தவளை ஆட்டுத்தாய்; தாமரை கைத்தாய்!

இன்னும் இவ்வியற்கை ஓவியத்தை நோக்க நோக்க எங்கும் கலை! எங்கும் அழகு! எங்கும் அருள்! எங்கும் இன்பம்! எங்கும் நன்மை!

இவ்வோவியத்தைத் தீட்டிக் காட்டியவர் எவர்? அவர் கல்வியில் பெரிய கம்பர்!

"சேலுண்ட ஒண்கணாரில் திரிகின்ற செங்கால் அன்னம்
மாலுண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்று மேதி கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத் தேரைதா லாட்டும் பண்ணை."

இக் காவிய ஓவியத்தில் 'வரால்முட்டக் காணவில்லையே'' எனத் தோன்றுகிறதா?

"மோட்டெருமை வாவிபுக முட்டுவரால் கன்றென்று
விட்டளவும் பால்சொரியும் வெண்ணையே"

இக் கம்பர் தனிப்பாடலில் முட்டுகிறது! இந்த முட்டினை இணைத்துக் கொள்வோமே!

---

## இந்தி எதிர்ப்பு மாநாடு

தமிழகத்தின் பல்வேறு கட்சிகளின் சார்பில் இந்தி எதிர்ப்பு மாநாடொன்று 15–8–78 இல் சென்னைப் பெரியார் திடலில் சிறப்புற நடைபெற விருப்பதாக அறிவிக்கப்பட்டுள்ளது. இம் மாநாட்டிற்குச் செட்டிநாட்டரசர் இராசா சர் முத்தைய செட்டியார் அவர்கள் தலைமை தாங்குகிறார். தவத்திரு குன்றக்குடியடிகளார் மாநாட்டை தொடங்கிவைக்கிறார்.

# கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்

[தமிழாகரர் வித்துவான் செ. வேங்கடராமச் செட்டியார்,

அண்ணாமலைப் பல்கலைக் கழகம்]

சீகாழியில் சிவபாத இருதயரும் பகவதியாரும் மனைத்தவம் புரிந்து, விரும்பிய வண்ணமே, பரசமயம் நிராகரித்து நீறுக்கும் புனைமணிப்பூண் புதல்வரைப் பெறுகின்றார்கள். திசையனைத்தின் பெருமை யெல்லாவற்றையும் தென்திசையே வெல்லவும், விண்ணுலகையும் பிறவுலகையும் மண்ணுலகமே வெல்லவும், அயல் மொழி வழக்கையெல்லாம் தமிழ் வழக்கே வெல்லவும் தோன்றிய அப் புதல்வர் மூவாண்டு நிரம்பப் பெறுகின்றார். ஒருநாள், நீராடச்செல்லும் தந்தையாருடன் அக்குழந்தையும் அழுதுகொண்டு பின் தொடர்கின்றது. தாதையார் முனியவும் தவிராது தொடர்ந்துவரும் அப்பிள்ளையை அழைத்துச் சென்று கரையில் இருத்திவிட்டு நீருள் பேராதுமூழ்கிச் செபம் செய்கின்றார். தந்தையைக் காணாது அக் குழந்தை, கண்மலர்கள் நீர் ததும்பக், கைமலர்களால் பிசைந்து வண்ணமலர்ச் செங்கனி வாய் மணியதரம் துடிப்பப் பொருமியழுகின்றது. திருத்தோணிச் சிகரம் பார்த்து, அம்மே, அப்பா என்று அழைத்து அழுகின்ற பிள்ளையாரின் நிலையை யறிந்த சிவபிரான் பார்வதியோடு அந்தப்பொய்கைக் கரையை அடைகின்றார். அழுகின்ற பிள்ளையார்தமை நோக்கி, அருட்கருணை யெழுகின்ற திருவுள்ளத்து இறையவர், தம்முடன் இருக்கும் மலைமகளைப் பார்த்தருளி, 'நின் மார்பில் பொங்கியெழுகின்ற பாலினைப் பொன் வள்ளத்தில் கறந்து இம்மகவுக்கு ஊட்டுக' என்று பணிக்கின்றார்.

அம்மையாரும் அவ்வாறே கறந்து அப் பாலோடு சிவ ஞானத்து இன்னமுதையும் கலந்து குழைத்தருளி, அப் பிள்ளையாரின் மலர்வாயில் வைத்து 'உண்' என ஊட்டுகின்றார். அப் பாலினையுண்டுகொண்டே எதிரில் உள்ள தம்மை நோக்கும் அந்தக் குழைந்தையின் கண்மலர்நீர் துடைத்தருளி, அந்தப் பொற்கிண்ணத்தை விளையாட்டுப் பொருளாக அப் பிள்ளையின் கையில் கொடுத்து அதன் அழுகையைத் தீர்த்தருளுகின்றார் சிவபிரான்.

யாவர்க்கும் தந்தை தாய் எனும் இவர்கள் அப் பிள்ளையாரிடம் தனியன்பு காட்டி இப்படி அருள் செய்தமையால் 'ஆளு

டைய பிள்ளையார்' என்ற பெயருக்கு உரியராகின்றார் அப் பிள்ளையார். மேலும் ஒப்பற்ற சிவஞானம் கைவரப் பெற்றமையால் சிவஞானசம்பந்தர் ஆயினர். இந்த நிகழ்ச்சியைச் சேக்கிழார் பெருமான்,

> "அமல, தேவருக்கும் முனிவருக்குந் தெரிவரிய பொருளாகும்
> தாவிறனிச் சிவஞான சம்பந்த ராயினர்."

என்று விளக்கியருளுகின்றார். மேலும் அக் கருத்தை நன்கு விளக்கும் நோக்கத்தால்,

> "சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
> பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
> உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
> தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்."

என்ற அழகிய இனிய திருப்பாடலைச் செய்தருளியுள்ளார்.

இத் திருப்பாட்டிற்குப் பொருள் சொல்லுமுறையில் புலவர் பெருமக்களுக்கிடையே சில வேறுபாடுகள் இருந்து வருகின்றன. இதில் கூறப்படும் சிவஞானம், ஓங்கிய ஞானம், கலைஞானம், மெய்ஞ்ஞானம் என்பன வேறுவேறு ஞானங்கள் என்பாரும், மெய்ஞ்ஞானமும் கலைஞானமும் ஆகிய இரண்டே என்பாரும் ஆகின்றனர். சிவஞானமும் பாங்கினிலோங்கிய ஞானமும் மெய்ஞ்ஞானமும் ஒரு பொருள்மேல் வந்த பல பெயர்கள் ஆதலின், அம் மூன்றையும் சிவஞானம் என்ற ஒன்றாகக் கொண்டும், அதனின் கீழ்ப்பட்டதாய கலைஞானத்தை ஒன்றாகக் கொண்டும், இருஞானங்களையுணர்ந்தார் சம்பந்தர் எனப் பெரும்பாலோர் கூறுகின்றனர். பாசஞானமாகிய கலைஞானத்தையும் அம்மையின் ஞானப்பாலால் சம்பந்தர் பெறவேண்டுமா? என்பதே இங்கு ஆராய்ச்சிக்குரிய பொருளாகும்.

இத் திருப்பாட்டை அளவைநூல் முறையானும் இலக்கண நூல் முறையானும் ஆராய்ந்து பார்க்கலாம்.

## அளவை நூல்முறை

வித்துவேறு முளைவேறு ஆவதில்லை. நெல்விதைத்தால் நெற்பயிர் முளைப்பதல்லது கழுதை முளைப்பதில்லை. இது காட்சி யளவையால் உணரத்தக்கது. காரணத்துளதாம் தன்மை காரியத்தினும் காணப்படுவதுதான் முறை. சீகாழிப் பிள்ளை யாரின் அழுகையைத் தணிக்க அம்மையார்தம் திருமுலைப்பாலைக்

கறந்து பொற்கிண்ணத்தில் ஊட்டுகின்றபோது வயிற்றுப் பசியோடு ஞானப்பசி நீங்குமாறு சிவஞானத்தின்னமுதினையும் கலந்து ஊட்டினர் என்பதை,

> "எண்ணரிய சிவஞானத்தின்னமுதங் குழைத்தருளி
> யுண்ணடிசி லென வூட்ட" (68)

என்ற அடிகளால் புலப்படுத்தியுள்ளார் சேக்கிழார் பெருமான். திருமுலைப்பால் வயிற்றுப் பசியைத் தணிக்க, அதனோடு குழைத் தருளிய சிவஞானத்தின்னமுதமே மூவாண்டுப் பருவத்தில் இறைவனைக் கண்டு தேவாரம் பாடும் ஞானத்தைக் கொடுத்து அப் பிள்ளையாரை ஞானசம்பந்தராக்கியது என்பது தெளிவு.

சிவஞானத்தைக் குழைத்துக் கொடுத்த அம்மையின் திரு முலைப்பால் சிவஞானத்தையே கொடுப்பது முறையாமே யன்றிப் பாசஞானம் எனவும் அபரஞானம் எனவும் சான்றோர்களால் இழித்துக் கூறப்படும் கலைஞானத்தையும் கொடுத்தது என்பது அளவை முறையாகாது என்பது தெளிவு. கலைஞானம் என்பது உயிர்கள் தம் முயற்சியால் கற்றுணரத்தக்கது. மெய்ஞ் ஞானமோ உயிர்களின் முயற்சியால் வருவதொன்றன்று. இறைவன் அருளால் மட்டுமே வரத்தக்கது. இத்தகைய வேறுபாடு பெரிதுடைய கலைஞானத்தையும் மெய்ஞ்ஞானத்தை யும் அம்மை குழைத்துத் தந்த ஞானப்பாலால் உணர்ந்தார் என்பது பொருந்துமா ?

சிவஞானம் மேலான ஞானமாதலின் அதையுணர்ந் தோர்க்கு அறியப்படாத பொருளே இல்லை. இயல்பாகவே புலப்படக்கூடிய கலைஞானம் அம்மையின் திருமுலைப்பாலால் வந்தது என்றால் அம்மையூட்டிய ஞானப்பாலுக்குச் சிறுமை யன்றோ உளதாகும்? பரனைக் காட்டாத பாசஞானத்தை அம் மையின் ஞானப்பால் அருளியதாகக் கூறல் பொருந்துமா ?

தாம் கூறப்போகும் 'கலைஞானம் உணர்வரிய மெய்ஞ் ஞானம்' என்பதற்குப் பின்னுள்ளோர், 'கலைஞானமும் மெய்ஞ் ஞானமும் உணர்ந்தார்' என உம்மைத் தொகையாக்கிப் பொருள் கொண்டிடுவார்களோ என்ற ஐயத்தால் போலும் சேக்கிழார் பெருமான், "தாவிறனிச் சிவஞான சம்பந்தராயி னார்" என மேலே கூறிவைத்துள்ளார். தனிச் சிவஞானம் என்பது கலைஞானத்தோடு சிறிதும் கலப்பில்லாது தனித்த சிவஞானம். ஒப்பற்ற சிவஞானம் எனப் பொருள்படுதல் காண லாம். அதனோடு 'தாவில்' என்ற அடைமொழியும் கொடுத்து

குற்றமற்ற தனிச் சிவஞானம் என்பதைப் புலப்படுத்தியுள்ளமை காணலாம்.

மேலும், "யாரளித்த பாலடிசில் உண்டது நீ" எனச் சிவபாத இருதயர் வெகுண்டு கேட்டபோது, சம்பந்தரின் செய்கை கூறவந்த சேக்கிழார் பெருமான்,

"பாவையுடன், எண்ணிறைந்த கருணையினு னின்றுரை யெதிர்காட்டி
உண்ணிறைந்த பொழிர்தெழுந்த உயர்ஞானத் திருமொழியால்"

என்று விளக்கியுள்ளமையும் காணலாம். இங்குத் திருஞான சம்பந்தரின் மொழியை 'உயர் ஞானத் திருமொழி' எனச் சிறப்பித்திருப்பதை நோக்குதல் வேண்டும். இதனால் சம்பந்தர் உணர்ந்தது உயர் சிவஞானமே; கலைஞானம் அன்று என்பதும், அவர் முதற்கண் மொழிந்த மொழியும் உயர்ஞானத் திருமொழியே என்பதும் உணரலாம். உயர்வில்லாத கலை ஞானத்தை விலக்கவே 'உயர்ஞானத் திருமொழி' என அடை கொடுத்தவாறு அறியலாம்.

இதுகாறும் கூறியவாற்றல் அம்மையார் எண்ணரிய சிவ ஞானத்தின்னமுதங் குழைத்தருளிய திருமுலைப் பாலையுண்ட சம்பந்தர் சிவஞானத்தை யுணர்ந்தார் என்று கூறுவதே பொருத்தமாவதல்லது, பரனைக் காட்டாத கலைஞானத்தையும் உணர்ந்தார் என்று கூறுவது அளவை நூல் முறைக்கு ஏற்ற தன்று என்பதைக் கண்டோம். நெல் கமுகாய் நீளுவதில்லை, நெல் நெல்முளையைத்தான் தோற்றுவிக்கும்; அதுபோலச் சிவ ஞானத்தைக் குழைத்த பால் சிவஞானத்தையே தந்தது.

## இலக்கண நூல்முறை

இனி, இலக்கண நூல் முறையால் இத் திருப்பாடலை நோக்குவோம். புலவர்கள், ஒரு பொருள்மேல் பல பெயர்வரத் தொடுப்பது இயல்பு. அவ்வாறு பல பெயர்களை ஒரு பொரு ளுக்குக் கொடுத்துக் கூறும்போது இவ்வாறுதான் கூறவேண் டும் என இலக்கண நூலோர் ஒரு வரையறை செய்துள்ளனர்.

"ஒரு பொருள்மேல் பலபெயர்வரின் இறுதி
ஒருவினை கொடுப்ப, தனியும் ஒரோவழி" (நன்னூல் - 392)

என்பது அவ் வரையறை. ஒரு பொருள் குறித்து வேறு பல பெயர்கள் வந்தால் இறுதியில் ஒரு வினையே கொடுத்தல்

வேண்டும். ஒவ்வோரிடத்துத் தனித்தனியே வினை கொடுத்தலும் உண்டு என்பது பொருள்.

ஆசிரியன், பேரூர்கிழான், செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்தான் என்பது முதற்பகுதிக்கு எடுத்துக்காட்டு.

எந்தை வருக! எம்பெருமான் வருக! மைந்த வருக! மணாள வருக! என்பது பிற்பகுதிக்கு எடுத்துக்காட்டு. இதில் நாம் நோக்க வேண்டியது முதற்பகுதியையே. ஒரு பொருள் பற்றிய பல பெயர்கள் அடுக்கி வந்து இறுதியில் ஒருவினை கொண்டு முடிய வேண்டும் என்பது விதி. இடையில் வேறொரு பெயர் விரவினுல் இறுதியில் ஒரு வினை கொடுத்து முடிக்க இயலாது. இவ் விலக்கண விதியை யுளங்கொண்டு அத் திருப் பாட்டை நோக்குவோம்.

சிவஞானம், பாங்கினில் ஓங்கிய ஞானம், மெய்ஞ்ஞானம் இம் மூன்றும் ஒரு பொருள் குறித்த பல பெயர்கள். சம்பந்தர் சிவஞானத்தையும், பாங்கினில் ஓங்கிய ஞானத்தையும், மெய்ஞ் ஞானத்தையும் உணர்ந்தார் என்று இரண்டனுருபேற்று, நின்ற பெயர்களுக்கிறுதியில் ஒருவினை கொடுத்தல் பொருத்த மாகும்; இம் மூன்றும் ஒரு பொருட் பெயர்களேயாதலின் சிவ ஞானத்தோடு சிறிதும் இயைபில்லாத கலைஞானத்தையும் இடையில் சேர்த்துக் கொள்வது பொருந்துவதன்று.

ஆசிரியன், பேரூர்கிழான், செயிற்றியன், இளங்கண்ணன், சாத்தன், பரணன் வந்தான் என்று ஒரு பொருள்மேல் வாராத 'பரணன்' என்ற பிற பெயரையும் உடன் எண்ணி இறுதியில் ஒருவினை கொடுப்பது எப்படி வழுவோ, அப்படியே சிவஞானத் தின் வேறு பெயர்களாகிய ஓங்கிய ஞானம், மெய்ஞ்ஞானம் என்ற பெயர்களோடு கலைஞானத்தையும் சேர்த்து எண்ணி, உணர்ந்தார் என இறுதியில் ஒரு வினை கொடுப்பதும் வழு வாகும். இவ் வழுவினைத் தெய்வப் புலவர் சேக்கிழார் பெருமான் செய்தார் என்று கூறுவது பொருந்தாது; இதற்கு வேறு அமைதி யான பொருள் கூறுவதே சிறப்புடையதாகும்.

சிவஞானத்தின் இயல்பை மூன்று வகையாகப் பாகுபாடு செய்து புலப்படுத்துகின்றார் சேக்கிழார் பெருமான். ஒவ்வோ ரியல்பைக் கூறும்போதும் வெவ்வேறு பெயரைக் கையாளு கின்றார். சிவஞானத்தின் நிகழ்காலப் பயனையும், எதிர்காலப் பயனையும், அதன் ஒப்புயர்வற்ற தன்மையையும் விளக்க வேண்டும் என்பது சேக்கிழார் நாயனாரின் கருத்து. முதற்கண்

'சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்' எனச் சிவஞானம் பெற்ற உயிர் நிகழ்காலத்தில் பெறும் பயனை விவரிக்கின்றார். பதார்த்தம் பாராது பரமே பார்த்திருக்கும் பாக்கியம் வளர்தற்குக் காரணமாகிய சிவஞானம் என்பது பொருள்.

அச் சிவஞானத்தைப் பெற்ற உயிர் எதிர்காலத்தில் எய்தும் பயனைக் கூறுவாராய்,

"பவமதனை யறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்"

என்கின்றார். பிறவியை அடியோடு அறுமாறு மாற்றுகின்ற தன்மையிற் சிறந்த ஞானம் என்பது பொருள். சிவஞானம், தன்னையடையப்பெற்ற உயிர் மீண்டும் உலகிற் பிறவாது மாற்றும் சிறப்புடையது—முத்தியளிக்கும் சிறப்புடையது—என்பது கருத்து.

இனி, அந்த ஞானத்தின் பெருமை எத்தகையது என்னின்? தமக்கு உவமையில்லாத சிவனைப் போலவே உவமையில்லாப் பெருமையுடையது. பாசஞானமாகிய கலைஞானத்தால் உணர்தற்கு அரியது என்பார்,

"உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்" என்கின்றார். 'உவமையிலா மெய்ஞ்ஞானம், கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்' என உவமையிலா என்ற அடையை மெய்ஞ்ஞானத்திற்கே ஏற்றவேண்டும். பாச ஞானமாகிய கலைஞானம் உவமையிலாக் கலைஞானம் எனச் சிறப்பிக்கப்படுதல் பொருந்தாது. கலைஞானத்தால் காண்பரிய கடவுளைக் காட்டி பிறவியறுத்து முத்தியளிக்கும் சிவஞானமாகிய பாங்கினிலோங்கிய மெய்ஞ்ஞானம் இருக்கும்பொழுது, பாச ஞானமாகிய கலைஞானம், 'உவமையிலா' என்ற அடைமொழியைப் பெறுவது எங்ஙனம் பொருந்தும்? ஈடும் எடுப்பும் அற்ற 'மெய்ஞ்ஞானமே 'உவமையிலா' என்ற அடையைப் பெறுதற்குரியதாகும். பாசஞானம், அபரஞானம் என்று இழித்துக் கூறப்படும் கலைஞானத்திற்கு இந்த அடைமொழியைச் சேர்ப்பது குறிப்புச் சொல்லாய் அதற்கு இகழ்ச்சியைப் புலப்படுத்தற்கே உதவும் என்பது தெளிவு.

உண்மை ஞானத்தின் மூன்று இயல்புகளைப் புலப்படுத்த வேண்டி,

'சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்'

எனவும்,

'பவமதனை யறமாற்றும் பாங்கினி லோங்கிய ஞானம்'

எனவும்,

உவமையில்லதும் கலைஞானத்தால் உணர்வரியதுமாகிய மெய்ஞ்ஞானம் எனவும் மூன்று பெயர்களைக் கொடுத்துச் சிவ ஞானத்தின் முப்பேரியல்புகளை விளக்கி அத் தகு மெய்ஞ் ஞானத்தை முன்னைத்தவமுடைய சம்பந்தர் அம்மையின் திரு முலைப்பாலருந்திய நிலையில் உணர்ந்தருளினார் என்று, அம்மை யின் திருமுலைப்பாலின் சிறப்பையும் அதைப் பெறுதற்கேற்ற தகுதி முன்னைத் தவத்தால் சம்பந்தர்க்கு இருந்த நிலையையும் இவ்வினிய திருப்பாட்டால் தெய்வச் சேக்கிழார் புலப்படுத்தி யுள்ளார் என்பதை யுளங்கொளல் வேண்டும்.

இத் திருப்பாட்டின் திரண்ட பொருள் :—சிவனடியையே சிந்திக்கும் திருப்பெருகுதற்குக் காரணமாகியுள்ளதும், தன்னைப் பெற்ற உயிர்களின் பிறவியையறுத்து முத்தியளிக்கும் நன்மை யில் சிறந்துள்ளதும், உவமையில்லாததும் கலைஞானத்தால் உணர்வரியதும் ஆகிய மெய்ஞ்ஞானத்தை முன்னைத் தவ முடைய சம்பந்தர் தாம் அம்மை திருமுலைப்பாலை அருந்திய வுடன் உணர்ந்தார் என்பதாகும்.

இப் பொருளே அளவை நூல் முறைக்கும், இலக்கண நூல் முறைக்கும் ஏற்புடையதாகும் என்பதை அறிஞருலகம் ஏற்றுக்கொள்ளும் என நம்புகின்றேன்.

---

கலைச்சொல்

ஏகதாளம், அடதாளம், திரிபுடதாளம், ஜம்பதாளம், ரூபகதாளம், மட்டியதாளம், த்ருவதாளம் என எழுவகைத் தாளங்களை வடமொழியாளர் வழங்குகின்றனர். தனித் தமிழ்த் தாள வகைகளைக் கூத்தநூல் குறிக்கின்றது. ஏகம், அடை, மூவடை, திண்ணம், உருவம், மட்டியம், துலை என்பன அவை. பாட்டனார் தேடிவைத்த பழஞ் சொத்தைப் பயன்படுத்திக் கொள்ளாத பழி நமக்கு உண்டே அல்லாமல், பாட்டனார்மேல் என்ன பழி உண்டு.

புலவர் இரா. இளங்குமரன்

# பழந்தமிழில் மக்கட்பெயர்

[பன்மொழிப் புலவர், இரா. மதிவாணன்]

(சிலம்பு ௫௨, பரல் ௪௦, ௪௧௩ ஆம் பக்கத் தொடர்ச்சி)

இதிலிருந்து அவியன்[7] ஆடுகளைக் காப்போன், மந்தைக் காரன் என்னும் பொருளில் வழங்கிய ஆண்பாற் பெயர் என்று தெளிவாகிறது. மக்களைக் காப்போன் என்னும் பொருளில் அலெக்சாந்தர் (Alexander - defender of men) என்றும் காவலன் காப்பாளன் என்னும் பொருளில் மோசசு டேரியசு என்றும் கிறித்தவர் பெயரிட்டுக்கொள்வதை இதனுடன் ஒப்பு நோக்குக. கோபாலன் கோவிந்தன் என்னும் சமற்கிருதப் பெயர்களும் ஆனிரை காப்பவனை உணர்த்துகின்றன.

---

7. சமற்கிருதத்தில் அவி (ஆடு)க்கு மூலம் 'அவ்' என்பர். Skt. avi - Sheep $\sqrt{av}$ - favourable.

ஆட்டின் மயிராலாகிய கம்பளி சோமச்சாற்றை வடிகட்டப் பயன்படும் தன்மை நோக்கி அவ் (வாய்ப்பாயிருத்தல்) என்னும் வேர்ச்சொல்லினடியாகக் கம்பளி செய்ய உதவும் ஆடுகளை அவி குறிப்பதாகச் சமற்கிருதவாணர் மூலங்காட்டுவர். அது சிறிதும் பொருந்துமாறில்லை. சோமச்சாறு வடிகட்ட கம்பளி பயன்படுத்திய காலத்திற்கு முன்பு ஆடுகள் இருந்ததில்லையா? பொருளிசைவுத் தொடர்புகள் (Semantic relations) காலத்தால் பின்னோக்கிச் செல்லுமா? என்னும் வினாக்களுக்கு அவர்கள் என்ன விடையிறுப்பர்!

அவிந்திருந்தல் - அடங்கியிருத்தல், அவிந்தொழுகல் - அடங்கி நடத்தல். அவி என்னும் முதனிலையே அவையைக் (கூட்டம்) குறிக்கும். அவி - அவை. ஒ. நோ. குவி - குவை. பிசைந்த ஈரமண்ணை மொத்தையாய் ஒன்றன்மேல் ஒன்றாகக் குவித்து வைக்கும் சுவர் 'குவி' எனப்படும். உயர்ந்த மட்டுங் குவி வைக்கும் ஒட்டர்க்கும் (தனிப். ii, 131, 331). ஒரு மந்தை யாய் அவிந்திருக்கும் (அடங்கியிருக்கும்) ஆடுகள் அவி எனப் பட்டன. அவி - மந்தை. அவியன் - மந்தைக்காரன். இத் தமிழ் வேர்ப்பொருள் வலிந்துரைக்கும் சமற்கிருத வேர்ப்பொரு ளினும் சிறந்திருத்தல் காண்க. சமற்கிருத வாணர் தமிழி லின்றும் கடன் பெற்ற எண்ணிறந்த சொற்களைச் சமற்கிருதச் சொல்லென்றே பிறழவுணர்ந்து வலிந்தும் நலிந்தும் மூலங் காட்டுகின்றனர் என்பது இதனால் தெளிவாகிறது.

28. அவினி

அவினி சேரமன்னன். இவனை ஆதனவினி என்றும் அழைத்தனர். இம் மன்னனை ஓரம்போகியார் ஐங்குறுநூற்று முதற்பத்துப் பாடல்களிலும் "வாழி யாதன் வாழியவினி" என்று குறிப்பிடுகிருர். குடிப்பெயர் முன்னும் இயற்பெயர் பின்னுமாக ஆதன் அழிசி, ஆதன் எழினி, ஆதன் அவினி எனச் சேர மன்னரின் பெயர்கள் விளங்கின.

அவினி என்னும் சொல் அடக்கமுடையோன், அடங்கியோன் என்று பொருள்படுகிறது. அவிய—அடங்க. ஒ. நோ. பொலமிலங்கு சென்னிய பாறுமயி ரவிய (புறம். 374 : 3) வலிமையும் அழகும் மிக்கவனை எழினி என்ருற் போல், சான்ருேர்பால் அவிந்தொழுகும் (அடங்கி நடக்கும்) பண்பின் சிறப்பால் அவினி என்னும் இயற்பெயர் வழங்கியது. அடக்கமுடையவன் எனப் பொருள்தரும் சாலமோன் என்னும் கிறித்தவப்பெயர் இதனுடன் ஒப்பிடத்தக்கது.

29. அழாந்தை

அழான் புழான் என்பன பழங்காலத்தில் ஆண்பாற் பெயர்களாக இருந்தன. அழான் + தந்தை—அழாந்தை, புழான் + தந்தை—புழாந்தை என இப்பெயர்கள் தொல்காப்பிய (தொல். எழுத். 348) உரையில் எடுத்தாளப்பட்டுள்ளன.

கிழவன்—கிழான் எனத் திரிந்தவாறு அழவன்—அழான் ஆயிற்று. இளமைப் பொருளவாய குழவும் மழவும் குழகன், மழவன் எனக் ககர வகர எழுத்துப்பேறு பெற்றிருத்தலைப் போல, 'அழ' முதனிலை அழகு—அழவு என்னும் பண்புப்பெயர் வடிவங்களைப் பெறும். அழகு ஒழுகுகிறது என்பதை அழவு ஒழுவுது என்னும் நாட்டுப்புறக் கொச்சை வழக்கிலும் ககரத்திற்கு வகரம் போலியாக வருதலைக் காணலாம். கன்னடத்தில் 'அழ' முதனிலை அன்பு என்று பொருள்படுகிறது.

க. அழ்க—அன்பு அழ்தி—அன்பு

அழ்திகார—அன்புடையவன்

து. அர்கமெ—அன்பு. தெ. அக்கற—பற்று, அன்பு.

பொருந்துதல் எனப் பொருள்படும் 'அல்' முதனிலையிலிருந்து அன்பு என்னும் சொல் தோன்றியதாகப் பாவாணர்

அவர்கள் கூறுவார். அல்—அள்—அழ் எனத் திரிந்த வடிவமே கன்னடத்தில் இப்பொருளில் இன்றும் வழக்குடையதாயுள்ளது. இதிலிருந்து, அன்புடையவன், அன்பினன் எனப் பொருள்படும் 'அழான்' ஆண்பால் இயற்பெயராகப் பழங்காலத்தில் நிலவியது என அறியலாம். கிறித்தவர்க்கு அன்பினன் என்னும் பொருளுடைய 'ஆல்வின்' ஆண்பாற்பெயர் சூட்டப்படுதலைக் காணலாம்.

30. அழிசி

நற்றிணை 87, 190, குறுந்தொகை 258 ஆகிய பாடல்களில் அழிசியின் பெயர் கூறப்படுகிறது. ஆதனழிசி, கொல்லனழிசி, நல்லழிசி, அழிசி நச்சாத்தனார் என அழிசி பெயர் பூண்டோர் பலர். கன்னடத்தில் 'அழுக' என்பது ஆண்பாற்பெயர். அழி என்பது மிகுதிப் பொருளையும் ஆற்றுக் கழிமுகத்தையும் குறித்த பெயர்ச்சொல்.

அழி—ஆற்றுக்கழிமுகம்.

ம அழி. க. அழவெ. து அழுவெ.

அழி—மிகுதி, பெருக்கம்

அற்றார் அழிபசி (குறள். 226)

அல்லங்காடி அழிதருகம்பலை (மதுரைக். 544)

அழியும் புனல் அஞ்சன மாநதியே (சீவக. 1193)

அழிசி என்னும் ஆண்பாற்பெயரில் 'அழி' ஆற்றுக்கழிமுகத்தைக் குறித்ததாயின் அழியன் என வழங்கியிருக்க வேண்டும். துறைவன், சேர்ப்பன், குன்றன், மலையன், பொருப்பன் என்னும் பெயர்களை நோக்குக. எனவே, அழிசி பண்பு சுட்டிய ஆண்பாற்பெயராதல் வேண்டும். மிக்கவன், பெரியோன் என்னும் பொருளில், அக் காலத்தில், அழிசி இயற்பெயராக வழங்கியது எனலாம். குழிந்துள்ளது குழிசி. அழி (பெருக்கம், உயர்வு) உள்ளவன் அழிசி. ஆரோன் என்னும் கிறித்தவ ஆண்பாற்பெயர் இப் பொருள் உடையது.

31. அள்ளன்

அள்ளன் அகம் 325 ஆம் பாடலில் குறிப்பிடப்படுகிறான். 'அள்' என்னும் முதனிலை செறிவு, வன்மை, கூர்மை என்று

பொருள்படும். இச்சொல் கன்னடத்தில் சிறுமை, மென்மை, அழகு, தெளிவு என்று பொருள்படுகிறது.

க. அள் — சிறுமை. அள்ளூர் — சிற்றூர். அள்ளெ கொம்பு—சிறுகொம்பு.

ம. அள்—சிறுமை. அள்ளோடன்—மெல்லிய பருப்புள்ள தேங்காய்.

நெருக்கமும் செறிவும் குறித்த 'அள்' முதனிலை, சிறுமை, மென்மை, அழகு, தெளிவு என்னும் பொருள்களைக் குறிக்கும். கன்னட ஆட்சி காலத்தால் பிந்தியதாதலின், நெருக்கமும் செறிவும் வன்மையைக் குறித்த பழந்தமிழ்ச் சொல்லாட்சியின் அடியாக வன்மையாளன் என்னும் பொருளில் அள்ளன் ஆண் பால் இயற்பெயராய் வழங்கியிருத்தல் வேண்டும். ஆண்ட்ரு, சார்லசு என்னும் கிறித்தவப்பெயர்கள் வன்மையாளன் என்னும் பொருளின.

## 32. அள்ளூர் நன் முல்லையார்

அள்ளூர் நன்முல்லையார் அகம் 46, குறுந். 32, 96, புறம். 306 ஆகிய பாடல்களைப் பாடியவர். பாண்டிநாட்டுச் சிவ கங்கைப் பகுதியில் அள்ளூர் உள்ளதென்பர்.

> "கொற்றச் செழியன் பிண்ட நெல்லின்
> அள்ளூர் அன்னவென் ஒண்டொடி"

என்னும் வரிகள் பாண்டிநாட்டு அள்ளூரைச் சிறப்பிக்கின்றன. வடமலபார் பகுதியிலுள்ள நீலேசுவரத்திற்கு அள்ளடம், அள்ள ரிடம் எனப் பழம்பெயர்கள் இருந்தன.

மாங்குடி மருதனார், குறுங்குடி மருதனார், குன்றனார் என்னும் பெயர்கள் திணைநிலப் பெயரடியாகத் தோன்றிய இயற் பெயர்கள். நன்முல்லையாரும் முல்லைநிலத்தின் பெயரால் அழைக்கப்பட்டார். ஆங்கிலத்தில் டக்லசு என்னும் ஆண்பாற் பெயர் ஓடையன் எனப் பொருள்படுதலைக் காண்க.

## 33. அறிவனார்

அறிவனார் பஞ்சமரபு என்னும் நூலை இயற்றியவர் (சிலம்பு 6 : 35 உரை). அறிவன் என்னும் சொல் குறிப்பாகக் கணிவனைக் குறிக்கும் (கலி. 39). கணியத்தில் வல்லவராதலால், தொழில்பற்றி வந்த சிறப்புப்பெயரே இவருக்கு இயற்பெயர்

போல நிலைத்துவிட்டது. கன்னடத்தில் 'அறில்' விண்மீனைக் குறிக்கிறது. குறிதாயிருப்பது குறில். அறிவனால் அறிவதா யிருப்பது அறில். குறிப்பிட்ட விண்மீன் கூட்டங்கள் அல்லது சுடர்மிக்க விண்மீன் அறில் எனப்பட்டது போலும். விண்மீன் களைக் கொண்டு காலத்தையும் எதிர்வரும் நன்மை தீமைகளை யும் கணிக்கும் கணிவரின் (Astrologist) அறப்பழங்காலக் கணித அறிவை, அறிவன் அறில் என்னும் சொற்கள் காட்டி நிற்கின் றன. அறிவொளி எனப் பொருள்படும் ஞானப்பிரகாசம் என்னும் பெயரும், ரெய்மண்ட் என்னும் கிறித்தவப் பெயரும் இப்பொருளின. விண்மீனைச் சுட்டிய அக்தர், ஜொஹ்ரா, பர்வின், நஜ்மா, அன்ஜீம், சிதாரா, சுரய்யா, நய்யர் என்னும் முகமதியப் பெயர்களும் இப்பொருளின.

34. அறிவுடை நம்பி

பாண்டிய மன்னனான அறிவுடை நம்பி குறுந். 230, அகம். 28, நற். 15, புறம். 188 ஆகிய பாடல்களைப் பாடியவர். அறி என்னும் முதனிலையே அறிவு என்று பொருள் தரும். அறி கொன் றறியா னெனினும் (குறள். 638).

பழந்தமிழர் அறிவை உண்மைச் செல்வமாக மதித்தவர்! 'நுண்ணுணர்வின்மை வறுமை அஃதுடைமை பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்' என்றது இப்பொருட்டே.

ஆடவருட் சிறந்த பெருமகனை நம்பி என்பர். நம்பி குட்டுவன், நம்பி நெடுஞ்செழியன் என்பவற்றில் நம்பி சிறப்புப் பெயராக இயற்பெயரின் முன் வந்தது. திருக்கச்சி நம்பி, நம்பி யாண்டார் நம்பி என்பவற்றில் நம்பி மதிப்புறவு குறித்த உயர் சொற் கிளவியாக வந்தது. 'நம்பும் மேவும் நசையா கும்மே' என்னும் பொருட்பாட்டுக்கேற்ப அனைவராலும் விரும்பத்தக்க மேன்மையாளனை நம்பி என்றழைத்தனர். வீமன் வீடுமன் என்னும் பெயர்கள் அஞ்சச் செய்பவன் அச்சுறுத்துபவன் என்னும் பொருளின. இத்தகைய பெயர்களைப்பூண்ட பழந் தமிழர் அரியர். ஒருவருக்குச் சூட்டும் பெயர் அவருடைய மனப் பாங்கை வளப்படுத்துவதாக இருக்கவேண்டும் என்னும் உள வியல் நுட்பத்தைப் பழந்தமிழர் அறிந்திருந்தனர். பாண்டிய குலாந்தகன் (குலாந்தகன்—குலத்தை அழிக்கும் இயமன்) போன்ற பெயரைப் புனைந்தவனுக்குப் போரும் அழிவு நோக்கமுமே உள்ளத்தில் ஊற்றெடுத்து நிற்கும்.

(தொடரும்)

# தமிழில் பட்டம்பெறத் தடை ஏன்?

[திரு. பழநி பாலசுந்தரனூர்]

தமிழ் நாட்டில் எப் பணி புரிகின்றவரும் உயர் பள்ளிப் படிப்பு இல்லாவிடிலும் ஓய்வு நேரத்தில் தமிழ்மொழி பயின்று சென்னைப் பல்கலைக்கழகப் புலவர் தேர்ச்சி பெற்றுப் புலவர் பட்டம்பெற்று வந்தது இதுகாறும் வழக்கமாக இருந்துவந்தது. இவ்வாறு தனித்த முறையில் பயின்று புலவர் பட்டம் பெற்ற வர்கள்தாம் மகாவித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை, டாக்டர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், டாக்டர். மு. வரத ராசனார், டாக்டர் மா இராசமாணிக்கனார், டாக்டர் துரை அரங்க சாமிப் பிள்ளை ஆகியோர் ஆவர். யானும் இவ்வழியில் தமிழ் பயின்று புலவர் பட்டம் பெற்றவன்.

மேலும் பலர் தமிழ் பயில்வதன் காரணம் தமிழ் இலக்கிய இலக்கணங்களைச் சுவைக்கவும், புலவர் பட்டம் பெற வேண்டு மென்ற ஆர்வமுமே ஆகும். தமிழாசிரியர் பதவிகளைக் கைப் பற்றுவதற்காக அன்று என்பதைச் சிந்திக்க வேண்டும். இவர்கள் ஆவலை நிறைவேற்றவே பல மாலை நேர இலவசத் தமிழ்க் கல்லூரிகள் தோன்றித் தமிழ் வகுப்புகள் நடத்தி வந் தன; வருகின்றன. யானும் இவ்வழியைப்பின்பற்றி 30 ஆண்டு களாகச் செயல்பட்டு வருகிறேன். மாலை நேர இலவசத் தமிழ்க் கல்லூரிகளால் வேற்றுத் துறையில் பணி புரிபவர்களும் ஆசிரியர்களும் தமிழ் பயின்று புலவர் பட்டம் பெற்று வரலா யினர். தமிழ்மொழி வளர்ச்சிக்கு இது எடுத்துக்காட்டு. எங்கும் தமிழ் வளம் பெற்றது. அரசவையிலும் மெல்லப் புகுந்து ஒளி பெற்று வரலாயிற்று. ஆயின் இன்று சென்னைப் பல்கலைக் கழகப் புலவர் தேர்வு எழுதி ஆசிரியர் அல்லாத எவரும் புலவர் பட்டம் பெறாத நிலையில் சட்டம் கொண்டு வரப்பட்டுள்ளது. இது வருந்தத்தக்கதாகும். இதனால் விருப்பத்தோடு தமிழ் பயிலும் பலருக்கு ஏமாற்றம் உண்டாகியுள்ளது. தமிழ் படிக்காத நிலை ஏற்பட்டு விட்டதே என்று மனம் குமுறி ஏங்குகின்றனர். இந்த ஏக்கத்தைப் போக்க வேண்டுவது இன்றியமையாக் கடமை ஆகும்.

இத்தகைய சட்டத்தால் தமிழ் மொழி வளராது. தமிழ் பயில்வோர் தொகை குன்றிடும். ஊக்கமும் குன்றும். எனவே தனித்த முறையில் எவரும் படித்துப் புலவர் பட்டம் பெறும் வழக்கத்தைத் தொடர்ந்து நீட்டிக்க வேண்டும். தடை செய்வ தால் ஆர்வத்தோடு தமிழ் பயில்வோருக்கு அநீதி புரிவதாகும். எனவே, அரசும் சென்னைப் பல்கலைக்கழகமும் எவரும் தமிழ் படித்துப் புலவர் பட்டம் பெற விரைவில் வழி வகுக்க ஆவன செய்தல் வேண்டும்.

## நல்லாசிரியர் புலவர் இளங்குமரனார்

கழக நூலாசிரியரும், மதுரை முக்குலத்தோர் உயர்நிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியருமான புலவர் இரா. இளங்குமரனார் அவர்கள் தமிழ்நாட்டு அரசின் "நல்லாசிரியர்" விருது பெற்றுள்ளார். 27-7-78 அன்று தமிழ்நாட்டு ஆளுநர் மேதகு பிரபுதாசு பட்டுவாரி அவர்கள் சென்னைக் கலைவாணர் அரங்கில் இவ் விருதினை வழங்கினார்.



முகவை மாவட்டத்து வாழவந்தாள்புரத்தில் படிக்கராமர் என்னும் பெருமகனார்க்கும், வாழவந்தாள் என்னும் மங்கை நல்லார்க்கும் கடைசிப் பிள்ளையாக 30-1-1930 அன்று பிறந்த இளங்குமரனார் தாமே முயன்று தமிழ் பயின்று வித்துவான் பட்டம் பெற்றார். அருந்தமிழ் நூல்களில் பெரும்பகுதியை இவர் மனப்பாடம் செய்துள்ளார்.

சிறந்த பேச்சாற்றலும் எழுத்தாற்றலும் வாய்ந்த இளங்குமரனார் 1949 முதலே 'நெல்லைச் செய்தி' முதலிய இதழ்களில் கட்டுரைகளும் பாடல்களும் வரைந்து வெளியிட்டுள்ளார். புதினம், நாடகம், பேரிலக்கியம் முதலாய துறைகளில் பற்பல நூல்களும் இளைஞர்க் கேற்ற நூல்கள் பலவும் எழுதியுள்ளார். சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின்வழி வெளிவந்த இவரது முதல் நூல் "தென்னாட்டு வாணிகம்" என்பதாகும்; ஏறத்தாழ முப்பது நூல்கள் கழகவழி வெளிவந்துள்ளன.

கவிமணி தேசிக விநாயகனார், நாவலர் சோமசுந்தர பாரதியார் முதலிய அறிஞர் பெருமக்களால் பாராட்டப்பெற்றுள்ள இளங்குமரனார் மதுரை வட்டத் தமிழாசிரியர் கழகத் தலைவராகவும், மாவட்டக் கழகச் செயலாளராகவும், தேர்வுக்குழு அமைப்பாளராகவும், மதுரைத் தமிழ்க் காப்புக் கழகச் செயலாளராகவும், தமிழ்த் தொண்டர்குழுவின் கருத்துரைஞராகவும் பணியாற்றியுள்ளார் இப் புலவர் அவர்கள் அரிய நூல்களை ஆய்வதிலும் இயற்றுவதிலும் இன்பங்காணும் இயல்பினர். இவருடைய சொந்த நூலகத்தில் 3000க்குமேற்பட்ட அரிய நூல்கள் இடம் பெற்றுள்ளன.

நல்லாசிரியர் இளங்குமரனார் வாழ்க! அவர்தம் நன் முயற்சிகள் வெல்க!

# செய்திகளும் குறிப்புக்களும்

## காமராசர் நினைவு இல்லத் திறப்புவிழா

பெருந்தலைவர் காமராசர் அவர்கள் சென்னையில் வாழ்ந்த வள மனையைத் தமிழ்நாட்டரசு அவருடைய நினைவு இல்லமாக்கியுள்ளது. இவ் வில்லத்தின் திறப்பு விழா 15—7—78 அன்று கேரள மாநில ஆளுநர் மேதகு திருவாட்டி சோதி வெங்கடாசலம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தமிழ்நாட்டு முதலமைச்சர் மாண்பு மிகு ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் காமராசர் நினைவு இல்லத்தையும், தமிழ்நாட்டு ஆளுநர் மேதகு பிரபுதாசு பட்டுவாரி அவர்கள் காமராசரின் திருவுருவப் படத்தையும், இந்திய அரசு மின்துறை அமைச்சர் மாண்புமிகு பா. இராமச்சந்திரன் அவர்கள் ஷ இல்லத்தில் அமைந்துள்ள பொருட்காட்சியையும் திறந்துவைத்தனர். தமிழ் நாட்டு மேலவைத் தலைவர் மாண்புமிகு ம. பொ. சிவஞானம் அவர்களும் மற்றும் பலரும் உரையாற்றினர்.

## கூட்டுறவுச்செம்மல் சிக்கய்யாவின் 80வது பிறந்தநாள் விழா

கூட்டுறவுச் செம்மல் தகைசால் மு. சிக்கய்யா அவர்களின் 80 ஆவது பிறந்தநாள் விழா 25—7—78 அன்று பிற்பகல் 3 மணி அளவில் ஈரோடு மாசன உயர்நிலைப் பள்ளியில், பெற்றோர் ஆசிரியர் கழகச் சார்பில் காவல்துறை உதவிக் கண்காணிப்பாளர் திரு. எசு. இரத்தினம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தமிழ் மாமுனிவர் தவத்திரு. குன்றக்குடியடிகளார் விழாவில் கலந்து விழா நாயகருக்குப் பொன்னுடை யணிவித்துப் பாராட்டுரை வழங்கிச் சிறப்பித்தார்.

## தமிழகத் தமிழாசிரியர் கழகத்தின் 15 ஆவது மாநில மாநாடு

தமிழகத் தமிழாசிரியர் கழகத்தின் 15 ஆவது மாநில மாநாடு 23—7—78 அன்று மதுரை இரீகல் திரையரங்கில் புலவர் த. முருகேசனார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கல்வியமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் மாநாட்டைத் தொடங்கி வைத்தும், வருவாய்த்துறை அமைச்சர் மாண்புமிகு எசு. டி. சோமசுந்தரம் அவர்கள் மலரை வெளியிட்டும், உள்ளாட்சித்துறை அமைச்சர் மாண்புமிகு கா. காளிமுத்து அவர்கள் பரிசுகள் வழங்கியும் சிறப்பித்தனர். முதலமைச்சர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் பேருரை நிகழ்த்திச் சிறப்பித்தார்.

## பசுமைப்பணி மன்றத்தின் 12 ஆவது நிலவுக் கூட்டம்

ஈரோட்டுப் பசுமைப்பணி மன்றத்தின் 12 ஆவது நிலவுக் கூட்டம் 23—7—78 அன்று இரவு 7 மணிக்கு ஈரோட்டு வேலா அச்சக

மாடியில் மாவட்ட உரிமையியல் அறமன்றத் தலைவர் திரு. பொ. க. இராமசாமி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. நான்கு நூல்கள் வெளியிடப்பட்டன.

## திருக்குறள் பேரவை மாநில மாநாடு

திருக்குறள் பேரவை மாநில மாநாடு திருச்சிராப்பள்ளித் தேவர் மன்றத்தில் 15, 16—7—78 சனி, ஞாயிறு ஆகிய இரு நாட்களிலும் நடைபெற்றது. முதல்நாள் மாலை 6 மணிக்குத் தொடக்க நிகழ்ச்சியாக ஆய்வரங்கம் நடைபெற்றது. இந் நிகழ்ச்சிக்குத் திருக் குறளார் வீ. முனுசாமி அவர்கள் தலைமைதாங்கினார்கள். முத் தமிழ்க்காவலர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் தொடக்க வுரை நிகழ்த்தினர். உயர்திரு. வேலா. அரசமாணிக்கம் அவர்கள் திருவள்ளுவர் திருவுருவப் படத்தினையும், வேலூர்த் துணை அற மன்றத் தலைவர் திரு. தி. இராமகிருட்டிணன் அவர்கள் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் அமைத்த திருக்குறள் நூற் கண்காட்சியையும், பர். டி. அமிருதீன் அகமது அவர்கள் திருக் குறள் கலைக் கண்காட்சியையும் திறந்துவைத்து உரையாற்றினர்.

திருக்குறள் பேரவைத் தலைவர் தமிழ் மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி யடிகளார், முதுபெரும் புலவர் ச. தண்டபாணிதேசிகர் ஆகியோர் தலைமையில் ஆய்வரங்கம் நடைபெற்றது.

இரண்டாம் நாள் முற்பகல் நிகழ்ச்சியாகத் தவத்திரு குன்றக் குடி யடிகளார் அவர்கள் தலைமையில் நமது குமுகாய முன்னேற்றத் திற்கு இன்றியமையாததென வள்ளுவர் வலியுறுத்துவது அன்புடை மையா? அறிவுடைமையா? ஆள்வினையுடைமையா? என்னும் பொருள்பற்றிப் பட்டிமன்றமும், பிற்பகலில் க. த. திருநாவுக்கரசு அவர்கள் தலைமையில் உரையரங்கமும், தவத்திரு. குன்றக்குடி யடிகளார் அவர்கள் தலைமையில் கருத்தரங்கமும் நிகழ்ந்தன. பாவலரேறு பெருஞ்சித்திரனார் அவர்கள் சிறப்புரை யாற்றினர். சிறந்த தீர்மானங்கள் பல நிறைவேற்றப்பட்டன.

## தமிழ், சமற்கிருதம், மற்றும் இந்திய மொழிகள் பற்றிய ஆய்வு நிலையத்தின் ஆராய்ச்சித் தொகுதி வெளியீடு

மேற்படி ஆய்வு நிலையத்தின் முதலாவது ஆய்வுத் தொகுதி வெளியீட்டு விழா 18—7—78 அன்று தமிழ்நாட்டின் முன்னாள் ஆளுநர் மேதகு கே. கே. சா அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தமிழ்நாட்டின் இந்நாள் ஆளுநர் மேதகு பிரபுதாசு பட்டுவாரி அவர்கள் நூலை வெளியிட்டார். செட்டிநாட்டரசர் அரச வயவர் முத்தையா செட்டியார் அவர்கள் வெளியீட்டின் முதற்படியைப் பெற்றுக்கொண்டு உரையாற்றினர்.

## தமிழ் நூல்களைப் பிறமொழிகளில் வெளியிட அறிஞர் குழு

பிற மொழிகளிலுள்ள நூல்களைத் தமிழில் வெளியிடவும், தமிழ் இலக்கியங்களைப் பிற மொழிகளில் வெளியிடவும் நீதிபதி எஸ்.

மகராசன் அவர்கள் தலைமையில் ஓர் அறிஞர் குழுவைத் தமிழக அரசு அமைத்துள்ளது. டாக்டர் ச. வே. சுப்பிரமணியம், டாக்டர் சி. பால சுப்பிரமணியம், டாக்டர் சி. ஆர். சர்மா, திரு. கொண்டல் சு. மகா தேவன் ஆகியோர் அக் குழுவின் உறுப்பினர் ஆவர்.

குழுவின் முதற்பணியாக இத் துறைகளில் இதுவரை வெளிவந்துள்ள நூல்களைப் பற்றிய 'விளக்க நூற்றொகை' ஒன்றை உருவாக்கக் குழு திட்டமிட்டுள்ளது.

தகுந்த அறிஞர்களைக் கொண்டு குழு அமைத்துள்ள தமிழக அரசு அதன் பணி விரைவில் நடைபெறப் போதிய வசதிகள் உடனடியாகச் செய்ய வேண்டும். குழு புதிய நூல்களை வெளியிடுவதுடன் பழைய அரிய நூல்களை மீண்டும் பதிப்பிக்கலாம். இத் துறையில் ஈடுபட்டுப் பல நூல்களை வெளியிட்டுள்ள பதிப்பகத்தார்க்கும் இத்தகைய நூல்களை வெளியிடப் பொருளுதவி செய்ய வேண்டும்.

## மறைமலையடிகள் விழா

கவித்தென்றல், இளங்கோ கலைமன்ற இலக்கியப்பணியமைப்பின் சார்பில் மறைமலையடிகள் பிறந்தநாள் விழாவும் தமிழ் இயக்கம் பற்றிய கருத்தரங்கமும் பழம்பெரும் புலவர் பழநி பால சுந்தரனார் தலைமையில் நடைபெற்றன. திரு. சிறுவை மோகன சுந்தரனார் சிறப்புரையாற்றினார்.

அரசவைக்கவிஞர் பதவியைப் புதுப்பித்தமைக்கும் அரசு அலுவலர்கள் அனைவரும் தமிழிலேயே கையெழுத்திடல் வேண்டும் என்ற கொள்கைக்கும் நன்றி பாராட்டுத் தீர்மானமும், சென்னைப் பல்கலைக்கழகத்தில் புலவர் பட்டப் படிப்பை நிறுத்தியமைக்கு கண்டனத் தீர்மானமும் நிறைவேற்றப்பட்டன.

## தமிழின் சொல்வளம்

ஆங்கிலத்தில் எட்டு இலக்கம் சொற்களும், சமற்கிருதத்தில் பத்து இலக்கம் சொற்களும், இருப்பதாகக் கூறப்படுகிறது. தமிழ் ஓரிலக்கம் சொற்களையே கொண்டிருப்பினும் அஃது எல்லாச் சொல்லும் பொருள்குறித்தனவாக வேரோடி நிற்கும் இயன்மொழியாகும். தமிழ்நலம் நாடுவோர் ஒலிப்பினிமை குன்றாது பேசிப் பழகுதல் வேண்டும். நகரத்தில் வாழும் படித்தவர்களைவிட நாட்டுப்புறத்தில் வாழும் படிப்பறிவற்றவர்கள் பேச்சில் பழந்தமிழினிமை பாதுகாக்கப்பட்டுள்ளதை நம் செவிகள் கேட்டுப் பழகல் வேண்டும்.

---

பேராசிரியர் மதிவாணன் அவர்கள் 1—8—78 அன்று சென்னை ஒய். எம். சி. ஏ. பட்டிமன்றத்தில் பர். பொற்கோ அவர்கள் தலைமையில் 'தமிழின் சொல்வளம்' என்னும் பொருள் பற்றி நிகழ்த்திய சொற்பொழிவில் மேற்கண்டவாறு கூறினார். அவர் சொல் வரலாற்றாராய்ச்சி முறைகளைச் சுவைபட விளக்கினார்.

## தமிழ்நாடு ஓதுவார் மூர்த்திகள் சங்கம்

இச் சங்கத்தின் 31 ஆவது திங்கள் வழிபாடும் சுந்தரர் திருநாளும் நால்வர் படத்திறப்பும் புழலேரி (ரெட்ஹில்ஸ்) அழிஞ்சிலாம்பாக்கம் அருள்மிகு செல்வ விநாயகர் திருக்கோவிலில் 13—8—78 காலை 8 மணியளவில் திரு. கு. கணபதி முதலியார் அவர்கள் முன்னிலையில் சிறப்பாக நடைபெறும்.

## திருமுருக கிருபானந்த வாரியாரின் இலண்டன் செலவு

இலண்டன் மாநகரில் அருள்மிகு திருமுருகப் பெருமானுக்குக் கோயில் அமைக்கும் பணி நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இதன் தொடர்பாகச் சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தத் திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள் 27—7—78 இல் இலண்டனுக்குப் பயணமானார். அவர் ஆகஃச்டுத் திங்கள் 12 ஆம் நாள் வரை அங்குத் தங்கியிருந்து பாரிசு, சுவிட்சர்லாந்து ஆகிய நாடுகளுக்கும் சென்று ஆகஃச்டு 13 ஆம் நாள் சென்னை திரும்புகிறார்.

## அரசுப் பணியாளர் தமிழிலேயே கையொப்பமிட வேண்டும்

1956 ஆம் ஆண்டு தமிழ்நாடு ஆட்சிமொழிச் சட்டத்தின்படி, அரசுத் துறையில் பணியாற்றுபவர் அனைவரும் இனித் தமிழிலேயே கையொப்பமிடுதல் வேண்டும் என்னுமோர் ஆணையினை 21—7—78 இல் தமிழக அரசு பிறப்பித்துள்ளது.

## காமராசர் பல்கலைக் கழகம்

மதுரைப் பல்கலைக் கழகம் பெருந்தலைவர் நினைவாகக் காமராசர் பல்கலைக் கழகம் என மாற்றப்படும் என்று தமிழக முதல்வர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் அறிவித்ததன் தொடர்பாக அரசு ஓர் அவசரச் சட்டத்தின் மூலம் பெயர் மாற்றம் செய்துள்ளது.

## 'இந்தி' பற்றித் தென்னக முதல்வர்கள் மாநாடு

16—7—78 இல் சென்னையில் தமிழ்நாடு, ஆந்திரம், கேரளம், கன்னடம், புதுவை ஆகிய "தென்மாநிலங்களின் முதல்வர்கள் மாநாடு" என்றொரு மாநாடு நடைபெற்றது. இம் மாநாட்டில் 1967 ஆம் ஆண்டு ஆட்சிமொழிச் சட்டத்திற்கு மாறாக இந்தியை இந்தி பேசாத மாநிலங்கள் மீது திணிக்கக்கூடாது என்றும் அதனைத் தடுத்து நிறுத்தாவிடில் நடுவண் அரசு இந்தி பேசாத மாநில மக்களின் நம்பிக்கையை இழக்க நேரிடும் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

## புதுவைக் கோயில்களில் தமிழில் அருச்சனை

தமிழ் நாட்டைப் பின்பற்றிப் புதுவைக் கோயில்களிலும் 15—9—78 முதல் தமிழில் அருச்சனை செய்ய இறையடியார்களுக்கு வாய்ப்பு ஏற்படுத்தித்தரப்படுமென்று புதுவை உள்ளாட்சித்துறை அமைச்சர் திரு. டி. இராமச்சந்திரன் அறிவித்துள்ளார்.

தமிழன்பர்கள் இவ் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு கோயில்களில் தமிழ் ஒலிக்கச் செய்யவேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறோம்.

### பேராசிரியர் அ. பழநிசாமி மறைவு

முன்னுள் சட்டக் கல்லூரி முதல்வராகவும், சட்டக் கல்வித் துறை இயக்குநராகவுமிருந்து, 1974 சூன் திங்கள் முதல் அரசு பணித்துறைத் தேர்வுக்குழு உறுப்பினராகவும் பணியாற்றிவந்த பேராசிரியர் அ பழநிசாமி அவர்கள் 9—8—78 அன்று, தமது 53 ஆவது அகவையில் காலமானுர்கள் என்ற செய்தி பறிந்து வருந்துகிரேம். மறைந்த பேராசிரியர் அவர்கள் நல்லதமிழ் பற்றுடையவர் இவர் 'சர்வதேச சட்டம்' (Inter National Law) என்னும் சட்டத்துறை நூலைத் தமிழில் உருவாக்கியிருப்பது அதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும் மறைந்த பேராசிரியரின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிரேம்.

### கவிஞர் பு. ஆ. முத்துக்கிருட்டிணன் மறைவு

கழக நூலாசிரியர்களுள் ஒருவரும், 'குழந்தைப் பாக்கள்' என்னும் குழந்தை இலக்கியத்திற்காக நடுவண் அரசின் பரிசினைப் பெற்றவரும், தமிழக நல்லாசிரியர் விருது பெற்றவரும், குழந்தைக் கவிஞர் விருது பெற்றவரும், பல் கலைக்கழகங்களின் ஆய்வில் சிறந்து தமிழக அரசு நிதி உதவியுடன் வெளிவந்த 'திருக்குறள் இசை மலர்' என்னும் அரிய இசைப் பாடல் தொகுதியினை உருவாக்கிய வரும், மணிநீலன் என்னும் புனை பெயர் பெற்றவருமான புதுப் பாவலர் பு. ஆ முத்துக்கிருட்டிணன் அவர்கள் 29—7—78 இல் காலமானுர்கள் என்ற செய்தியறிந்து வருந்துகிரேம். கழகவழி வெளிவந்துள்ள இவர்தம் பாடல்கள் சிறந்த குழந்தை இலக்கியங்களாகும். இத்தகைய நல்லாசிரியரை இழந்து வருந்தும் இவர்தம் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிரேம்.



### தூய போப் ஆண்டவர் மறைவு

கிறித்தவ இன மக்களின் சமயத் தலைவர் தூய போப் ஆண்டவர் அவர்கள் 6—8—78 இல் இத்தாலிய நாட்டின் வாடிகன் நகரில் காலமானுர் என்ற செய்தியறிந்து வருந்துகிரேம்.

1968 இல் பேரறிஞர் அண்ணு அவர்கள் அமெரிக்கா சென்று திரும்பியபோது வாடிகன் நகருக்குச் சென்று இங்கிருந்து தாம் எடுத்துச் சென்றிருந்த கழகப் பதிப்பான, ஜி யூ. போப் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த திருக்குறள் பதிப்பொன்றினை அன்பளிப்பாக வழங்கி அளவளாவிய செய்தி ஈண்டு நினைவு கூர்தற்குரியது. மறைந்த தூய போப் அவர்களின் இன்னுயிர் இறையடிகளில் இன்புறுவதாக.

மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை
(முன் பரல்-கக, உடுகூஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் (குலைத்திங்கள்) | 100 | 00 |
| ,, ஆ. சுப்டையா பிள்ளை அவர்கள் மேலாளர் | 5 | 00 |
| திரு. சொல்விளங்கும் பெருமாள் எம்.ஏ. அண்ணமலை நகர் | 8 | 00 |
| செல்வி அம்பிகா (பிறந்தநாள் நன்கொடை) பெங்களூர் | 10 | 00 |
| திரு. C. R. மகாதேவன் பி.இ., கோயமுத்தூர்-11 | 5 | 00 |
| திரு. S. A. துரை, சிங்கப்பூர்-12. | 10 | 00 |

---

# மதிப்புரை

## தொன்னூல் விளக்கம் (181 பக்)

[டாக்டர். உ.வே. சுப்பிரமணியம் தமிழ்ப் பதிப்பகம், சென்னை-20. ரூ. 6-00.]

வீரமாமுனிவர் இயற்றிய தொன்னூல் விளக்கம் பதிப்பாசிரியர் முயற்சியால் புத்துருபெற்று வந்துள்ளது. ஐந்திலக்கணங்களையும் 370 நூற்பாக்களில் தரும் இந் நூல் மூல நூலாசிரியரின் உரையுடன் கூடியது. நூலுக்கு விரிவான உரையிருப்பினும், விரிவஞ்சிச் சுருக்க உரையே இப் பதிப்பில் கொடுக்கப்பெற்றுள்ளது.

பதிப்பாசிரியர் நூலைப்பற்றி விரிவாகத் திறனாய்வு செய்துள்ளார். இப் பதிப்பிற்குச் சிறப்புத் தேடித்தருவது இத் திறனாய்வும் நூலின் பிற்சேர்க்கையான வீரமாமுனிவரின் நூற்குறிப்புமாகும். ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக்குப்பின் இப் புதிய பதிப்பைக் கொண்டுவந்துள்ள பதிப்பாசிரியர் பாராட்டுக்குரியவராவர்.

## கம்பன் ஆய்வடங்கல் (415 பக்)

[ச. சிவகாமி தமிழ்ப் பதிப்பகம் 2 கால்வாய்க்கரைச் சாலை, கஸ்தூரி பாய் நகர், சென்னை-20. ரூ. 15-00.]

கம்பராமாயணம் பற்றி இதுவரை வெளிவந்துள்ள பல்வேறு மூலப் பதிப்புக்கள், உரைகள், திறனாய்வு நூல்கள், தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளிவந்துள்ள பல் வகையான திறனாய்வுக் கட்டுரைகள் அனைத்தையும் எடுத்துக் காட்டுகிறது இந் நூல். பதிப்புக்களை, மூலம், சுருக்கம், வசனம், மொழிபெயர்ப்பு என்று பாகுபடுத்தியிருப்பதும் நூல்களையும் கட்டுரைகளையும் கம்பர் வரலாறு, கால ஆராய்ச்சி, பாத்திரங்கள், பண்புகள், கவிநயம் போன்ற பல தலைப்புகளில் பிரித்துக் கொடுத்திருப்பதும் நூல் அல்லது கட்டுரைகளினைச் சுருங்கச் சொல்லி விளங்கவைத்திருப்பதும் பாராட்டத் தக்க முயற்சிகளாகும்.

தமிழகத்தின் பல்வேறு பகுதிகளுக்குஞ் சென்று அரிய வகையில் திரட்டி முறைபாக வகைப் படுத்தித் தந்துள்ள இந் நூலாசிரியர் தமிழ்ப் பெருமக்களின் பாராட்டுதலுக் குரியவராவர்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 80, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.

## கழக நிலையங்களில் கிடைக்கும்

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| அகிலன் ஆய்வடங்கல்—சு. வேங்கடராமன், M. A. | 10 | 00 |
| மு. வ. ஆய்வடங்கல்— ,, | 12 | 00 |
| கட்டபொம்மன் கும்மிப் பாடல்—டாக்டர். தி. நடராசன் | 4 | 00 |
| அகிலன் கருத்தரங்க ஆய்வுரைகள் —பதிப்பு: Dr. முத்து சண்முகன், Dr. இராம பெரியகருப்பன் | 16 | 00 |
| வீரபாண்டிய கட்டபொம்மு கதைப் பாடல் —பதிப்பாசிரியர்: நா. வானமாமலை | 4 | 00 |
| முத்துப் பட்டன் கதை— ,, | 2 | 00 |
| மு. வ. நினைவு மலர் —டாக்டர் முத்து சண்முகம், சு. வேங்கடராமன் | 10 | 00 |
| குறள் கண்ட பெருவாழ்வு—டாக்டர் தி. முருகரத்தனம் | 5 | 00 |
| குறள் கூறும் இறைமாட்சி— ,, | 5 | 00 |
| வள்ளுவர் வகுத்த பொருளியல்— ,, | 6 | 00 |
| வள்ளுவர் வகுத்த அரசியல் (கருத்தரங்கக் கட்டுரைகள்) | 6 | 00 |
| குறள் கூறும் சமுதாயம்—காமாட்சி சீனிவாசன் | 10 | 00 |
| மலையமான்—புலவர் சா. குப்புசாமி | 9 | 00 |
| பாண்டியன் குழலி—தா. பி. வரதராசன் | 6 | 00 |
| தொல்காப்பியம் பொருளதிகாரம்-அகத்திணையியல் உரைவளம்—மு. அருணாசலம் பிள்ளை | 18 | 00 |
| நாடகக் கலையின் வரலாறு—எஸ். வி. சகஸ்ரநாமம் | 7 | 00 |
| திராவிட இலக்கணக் கொள்கை —தமிழாக்கம்: வ. ஜெயதேவன், பா வீரப்பன் | 3 | 00 |
| தமிழில் சமூக நாவல்கள்—டாக்டர் த. வே. வீராசாமி | 6 | 00 |
| முன்னும் பின்னும்—மு நிலாமணி | 4 | 50 |
| ஆத்ம சிந்தனை—இராஜாஜி | 3 | 00 |
| இது பொதுவழியல்ல—நா. பார்த்தசாரதி | 6 | 00 |
| நடுகல் வழிபாடு—வே. கேசவராஜ், M. A. | 7 | 00 |
| தனித் தமிழ்—க தமிழ மல்லன் | 6 | 00 |
| வையை—(மலர்-1) | 12 | 00 |
| வையை—(மலர்-2) | 9 | 00 |
| வையை—(மலர்-3) | 15 | 00 |
| வையை—(மலர்-4) | 8 | 00 |

# கழகப் புதிய வெளியீடுகள்

| | |
|---|---|
| The Cilappatikaram—In English by Prof. V. R. Ramachandra Dikshitar | 50 00 |
| தமிழில் எழுதுவோம் —ஆட்சிச் சொல் காவலர் கீ. இராமலிங்கனுர் | 7 50 |

சிற்றிலக்கியப் பாதுகாப்புத்திட்ட வெளியீடுகள் :

| | |
|---|---|
| மதுரை மீனுட்சியம்மை சந்தத் திருவடிமாலையும் திருவடிப் பத்தும் —ஆசிரியர் : முதுபெரும் புலவர், சோழவந்தான் அரசஞ் சண்முகனுர் | 3 75 |
| காளமேகப் புலவர் இயற்றிய சித்திரமடல் —குறிப்புரை : புலவர் சாந்த சுந்தரனுர் | 2 00 |

## பிற பதிப்பாளரின் புதிய நூல்கள்

பி. சி. கணேசன் எழுதியவை :

| | |
|---|---|
| உலகப் பெரும் போர் வீரர்கள் | 2 50 |
| உலகப் பெரும் தீர்க்க தரிசிகள் | 2 50 |
| உலகப் பெரும் விஞ்ஞானிகள் | 3 50 |
| தெய்வவழிச் சிந்தனைகள் | 6 00 |
| காதல் வாழ்வில் கால்நடைகள் | 2 75 |

டாக்டர் தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர்

| | | | |
|---|---|---|---|
| வாழுங்கலை | 1 75 | தேனிப்பு | 3 00 |
| மொழியியல் விளையாட்டுக்கள் I | | | 4 50 |
| வள்ளுவரும் மகளிரும் | 5 00 | பிறந்தது எப்படியோ | 4 00 |
| Philosophy of Tiruvalluvar | | | 5 00 |

பிற ஆசிரியர்கள் :

| | |
|---|---|
| கிரேக்க நாடகத்தில் தமிழ் உரையாடல் —இரா. மதிவாணன் க. மு. | 2 00 |
| The Treatment of Morphology in Tolkappiam —Dr. M. Isreial | 7 00 |
| Dravidian Language and Literature —Compilation ; Busangi Rajamani | 5 00 |
| Dissertations on Tamilology—Dr. Annie Thomas | 10 00 |
| Modern studies in Tamil—Pon. Kothandaraman | 7 00 |
| A Course in Modern Standard Tamil— ,, | 7 50 |

அப்பர் அச்சகம், சென்னை-1.